அறிஞர்

# பொ. திருகூடசுந்தரம், எம். ஏ., பி. எல்.

## எழுதிய நூல்கள்

1. அறிவுக் கனிகள்
2. அமுத மொழிகள்
3. இனிய சுவைகள்
4. அணையா விளக்கு
5. ஆங்கிலக் கவிதை மலர்கள்
6. இதய உணர்ச்சி
7. விவாகமானவர்கட்கு ஒரு யோசனை
8. குழந்தை எப்படிப் பிறக்கிறது?
9. கொக்கோக விளக்கம்
10. பாஞ்சாலி சபதம்
11. எனது பூங்கா
12. விஞ்ஞானப் பெரியார்கள்
13. விஞ்ஞானம் எதற்கு?
14. சைவ உணவு எது?
15. மந்தரை சூழ்ச்சி
16. கேள்வியும் பதிலும்
17. அப்பாவும் மகனும்
18. தந்தையும் மகளும்
19. அண்ணனும் தங்கையும்
20. ஜவஹர் கதை
21. தாசியின் காதல்
22. அழியாச் செல்வம்



57 படங்கள் சேர்ந்த
முதற் பதிப்பு 1955.

உரிமை
ஆசிரியருடையது



ஆசிரியர்

# பொ. திருகூடசுந்தரம், எம். ஏ. பி. எல்.

1891-ம் ஆண்டில் பிறந்தவர். 5-வது பாரம் முதலே முதற் பரிசு பெற்றுவர். எம். ஏ. இல் பல்கலைக் கழகத் தங்கப்பதக்கம் பெற்றார். 1921-ல் வக்கீல் வேலையை விட்டு ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டார். திருநெல்வேலி ஜில்லாவிலும் செட்டி நாட்டிலும் காந்திய இயக்கத்தை வேரூன்றச் செய்தார். காந்தி யடிகளின் கட்டுரைகளை முதன் முதலில் தமிழில் மொழி பெயர்த் தவர். திருநெல்வேலி நகரசபையில் அங்கத்தினராகவும், தேவ கோட்டை நகரசபையில் வைஸ்சேர்மனாகவும் இருந்து சமூக சேவை செய்தார். தீண்டாமை விலக்குக்குத் தீவிரமாக உழைத் தார். அவரும் அவர் மனைவியாரும் நாகர்கோவிலில் தீண்டாமை விலக்குச் சங்கம் நிறுவி ஆலயப்பிரவேசத்துக்கு அடிகோலினர். தமிழ் ஹரிஜன் பத்திரிகைக்கு ஆசிரியராயிருந்தார். ஆங்கிலத் திலும் தமிழிலும் பாண்டியத்துவமுடையவர். சென்னை, செனட் சபையில் அங்கத்தினராக இருந்தார். தமிழில் சொந்தமாக பத்து நூல்களும் மொழி பெயர்ப்பாகப் பத்து நூல்களும் எழுதி யுள்ளார். அவை அறிவும் இன்பமும் பெற விரும்புவோர் படிக்க வேண்டிய நூல்கள். சென்னை சர்க்கார் மூன்று நூல்களுக்குப் பரிசு அளித்துள்ளார். சிறந்த கட்டுரையாளர். விஞ்ஞானம் முதலிய கடினமான பொருள்களை எளிதில் விளங்குமாறு எழுதக்கூடி யவர். இப்பொழுது கலைக் களஞ்சியக் கூட்டாசிரியர். எளிய வாழ்க்கையும் உயர்ந்த சிந்தனையும் உடையவர்.



சென்னை அரசினர் கலைக் கல்லூரித் தலைவர்!

ஆங்கிலப் பேராசிரியர்

மு. முகம்மது கனி,

எம்.ஏ., எல்.டி.

## முகவுரை

"அணையா விளக்கு" அழகான பெயர், பொருத்தமான பெயர். பண்டைப் பெரியார் எடுத்துக் காட்டிய உண்மைகளே உலகினுக்கு ஒளியாக விளங்குகின்றன. இந்த ஒளி என்றும் குன்றாது, இருளில் தடுமாறுகின்ற மக்களுக்கு வழி காட்டுகின்றது.

மேல்நாட்டு அறிஞர்கள் கலை, இலக்கியம் இவைகளைப் பற்றிக் கூறிய பொன்மொழிகள் இந்நூலில் தொகுத்துத் தரப்பட்டிருக்கின்றன. பொருள் சிதையாத, அழகும் அழுத்தமும் அமைந்த மொழி பெயர்ப்பு. எளிதில் பயன்படும் வண்ணம் பல தலைப்புக்களின் கீழ் வகுக்கப்பட்டுள்ளன. கலா ரசிகர்கள், இலக்கிய ரசிகர்கள் ஆகியவர்களுக்கு இன்றியமையாத ஒரு துணை நூல்.

இதுபோன்ற நூல்களால் ஆசிரியர் திருகூடசுந்தரம் அவர்கள் பாரதியார் கண்ட கனவை நிறைவேற்றுகின்றார்கள். தமிழ் வளர்ச்சிக்கு அவர்கள் ஆற்றுகின்ற தொண்டு மிகவும் பாராட்டத்தக்கது.

சென்னை
6—8—'55

மு. முகம்மது கனி.

# பொருளடக்கம்

பக்கம்

# படங்கள்

1. கார்லைல்
2. ஷில்லர்
3. பிரௌன்
4. ரிக்டர்
5. ஒயில்ட்
6. ரஸ்கின்
7. செஸ்டர்ட்டன்
8. போப்
9. பிளேட்டோ
10. வால்டேர்
11. ஷெல்லி
12. நீட்சே
13. ஹ்யூம்
14. தோரோ
15. லாங்பெல்லோ
16. கோல்ரிட்ஜ்
17. பர்க்
18. கதே
19. லாம்
20. வால்ட் விட்மன்
21. மூர்
22. கீட்ஸ்
23. ஜான்ஸன்
24. டெனிஸன்
25. வோர்ட்ஸ்வர்த்
26. அடிஸன்
27. எமர்ஸன்
28. ஸ்விப்ட்
29. ஸ்டீவன்ஸன்
30. பர்ன்ஸ்
31. லாண்டார்
32. ஹெர்ஷல்
33. ஷோப்பஹர்
34. கௌப்பர்
35. ஜார்ஜ் எலியட்
36. ஜெபர்ஸன்
37. திருமதி பிரௌணிங்
38. ஹீன்
39. பைரன்
40. ஹோம்ஸ்
41. பென் ஜாண்ஸன்
42. பிராங்க்லின்
43. அரிஸ்டாட்டில்
44. மார்க் ட்வைன்
45. இப்ஸன்
46. மான்டேய்ன்
47. தாக்கரே
48. பென்னெட்
49. ஹோமர்
50. பிரான்ஸ்
51. டால்ஸ்டாய்
52. ஹூகோ
53. நொவாலிஸ்
54. பெயின்
55. ஷேக்ஸ்பீயர்
56. ஷெரிடன்
57. பெர்னார்ட்ஷா



# அணையா விளக்கு

## 1. கலை

1. கலை என்பது மனிதனுடைய இயற்கை, இயற்கை என்பது கடவுளுடைய கலை.

பெய்லி

2. உண்மையோடு பொருந்தாத கலை ஒரு நாளும் நிலைத்து நிற்காது.

கார்லைல்



கார்லைல்

3. உலகத்தில் அழியாது நிற்பது கலை ஒன்றே; சிம்மாசனம் அழியும், சிலை அழியாது.

டாப்ஸன்

4. ஒரு நாட்டில் கொண்டாடும் கலைச் செல்வங்கள் உலக மனைத்துக்கும் உரியனவே. உண்டாக்கிய நாடு அவற்றை உலகத்துக்காகப் பாதுகாக்கும் உரிமையுடையது.

ஹாவ்லக் எல்லிஸ்

5. கலையில் எட்டிப்பிடிக்க முடியாத விஷயம் எதுவும் கிடையாது. சிலர் அழகாக அழுவதற்குக் கூடக் கற்றுக் கொள்கின்றனர்.

ஓவிட்


ஷில்லர்

6. பயனில்லாத கலைகளைப் போல் மிகுந்த பயனளிப்பவை எதுவுமில்லை.

ஒவிட்

7. கலை என்பது இயற்கை போல் ஆகும்போதே பூரணம் அடைகின்றது.

லாங்கினஸ்

8. இசை ஓவியம் சிற்பம் முதலியவற்றைச் சுவைக்கத் தெரிந்தவன் மற்றொரு புலன் பெற்றவனாவான்.

அடிஸன்

9. கலைப் பொருளின் மேன்மை அது ஏமாற்றும் அளவே. ஏமாற்றுதிருப்பது இயற்கைக்கேயுள்ள உரிமையாகும்.

பர்க்

10. பூரணமானகலை புறத்தே காட்டிக்கொள்ளாது, மறைந்திருந்தே மனத்தினுள் செல்லும்.

ரெய்னால்ட்ஸ்

11. கலையே இயற்கையின் வலதுகை. இயற்கை உயிர் தந்தது, கலையே நம்மை மக்கள் ஆக்கியது.

ஷில்லர்

12. சிரமமின்றித் துய்ப்பதும், தியாகம் வேண்டாததும் கழிவிரக்கப்படவேண்டிய தேவையில்லாததுமான மகிழ்ச்சியைத் தருவது கலை ஒன்றே.

ஷில்லர்

13. உலகத்தில் சால்புக்கு அடுத்தபடி தூய்மை யுடையது கலை ஒன்றே.

ஹெ ஸிமன்ஸ்

14. உண்மையான கலைப் பொருள் தெய்வ சிருஷ்டி யின் சாயையேயாகும்.

மைக்கேல் ஆஞ்சலோ

15. கலையைத் தமது வாழ்க்கையில் ஓர் அம்சமாகச் செய்துகொண்டவரே கலையை உணர்ந்தவர்.

வில்லியம் மாரிஸ்

16. கலையானது பூரணம் அடைவது, கலை என்று தெரியாவண்ணம் செய்யும்பொழுதே யாகும்.

குன்றிலியன்

17. கலைகள் என்பவை நாகரிக வாழ்க்கையின் மலர்ச்சியாகும்.

ஹெர்பர்ட் ஸ்பென்ஸர்

18. உயர்ந்த உணர்ச்சிகளை ஊட்டுவதையே நோக்க மாகக் கொண்ட மனிதச் செயலே கலையாகும்,

டால்ஸ்டாய்

19. கலைப் பொருளை நீயே துய்க்கவேண்டும், வேறு யாரும் உன்னைத் துய்க்குமாறு செய்ய முடியாது.

ரஸ்கின்

20. விஞ்ஞான அறிவே கலைக்கு அடிநிலை. பல விஞ்ஞானங்களின் அடிநிலை மீதே ஒரு கலை எழுப்பப் படுகிறது.

மில்

21. ஐம்புலன்கள் இயற்கையினிடம் ஆன்மா வாயி லாகக் காண்பதை ஆக்கிக் காட்டுவதே கலை யாகும்.

போ

22. கலைப் பொருளின் மேன்மையின் அளவு அது எந்தக் காலத்திலும் அந்தக் காலத்ததுபோல் தோன்று மளவே யாகும்.

எமர்ஸன்

23. சான்றோரிடம் நடந்துகொள்வது போன்றே கலைப் பொருளிடமும் நடந்துகொள்ளவேண்டும். அதன் பின்னால் நின்று அது பேசத் திருவுளம்கொள்ளும் வரை காத்திருப்பாயாக.

ஷோபனர்

24. உன்னுடைய கலைப் பொருள் நல்லதாக, உண்மையானதாக இருக்குமானால், அது போற்றப்படவே செய்யும். இன்றோ, ஏழு ஆண்டுகழித்தோ, அல்லது நீ மாண்ட பின்னரோ — எதுவாயினும் ஒன்றே.

பிளாபர்ட்

25. நான் முதற்கண் காதலிப்பது இயற்கை, அதற்கு அடுத்தபடி காதலிப்பது கலை.

லாண்டார்



26. உயர்ந்த கலையின் தலையாய பண்பு அன்புடைமை, அதற்கு அடுத்த நிலையிலுள்ளது உண்மையுடைமை.

ரஸ்கின்

27. உணர்ச்சி வாயிலாக வாழ்க்கையைப் பார்ப்பதே கலையாகும்.

ஜோவா பிரௌன்

28. இயற்கை உண்டாக்கியது ஒரு உலகம், கலை உண்டாக்கியது மற்றொன்று.

ஸர் தாமஸ் பிரௌன்

29. மாணவன் ஆசிரியனைப் பின்பற்றுவதுபோல் கலையானது இயன்ற மட்டும் இயற்கையையே பின்பற்றும். ஆகவே கலையானது கடவுளுடைய பேரனாகும்.

தாந்தே

30. கலைக்கு வழி வகுத்துக்காட்ட இயலுமா? அது இயற்கையின் விதிகளின்படியே ஒழுகும். அதன் கடமை மனிதனுடைய தேவைகளுக்குத் தக்கவாறு நடந்து கொள்வதே.

டாஸ்டாவஸ்கி

31. கலை என்பது மனித ஆன்மா கஷ்டம் துன்பம் என்னும் சிறகுகளைக்கொண்டு பறந்து சென்று தேடிச் சேகரித்த தேனேயாகும்.

டிரீர

32. கலைக்கு ஒரு பகைவன் உள்ளன். மடமையே அவன்.

பென்ஜான்ஸன்



33. கலை என்பது ஓர் இலட்சியமாகாது, அது மக்களை நாடுவதற்குரிய ஒரு சாதனமட்டுமே.

மூஸார்ஸ்கி

34. கலை என்பது வாழ்க்கையின் உணவன்று, மதுவேயாகும்.

ரிக்டர்

ரிக்டர்

35. கலையைப் பயில்வது கடினம், அவள் தரும் பரிசு அழியாது நிற்பதில்லை.

ஷில்லர்

## 2. கலைஞன்

36. கலைஞனுக்குக் கலையே வாழ்க்கை முழுவதும்; அதுவே அவனுடைய வாழ்க்கையில் சிறந்த பகுதி.

ஆடம்ஸ

37. கலைஞனும் சான்றோனும் இன்பத்தைத் தங்களிடமே பார்ப்பவர்.

பீட்ஹோவன்

38. கலைஞர்கள் ஒருநாளும் கீழ்ப்படிவதில்லை.

ஆலெஸாலி

39. நல்ல கலைஞர்கள் எல்லாவற்றையும் தங்கள் கலைக்கே அர்ப்பணம் செய்துவிடுவர்.

ஆஸ்கர் ஒயில்ட்

40. உண்மையான கலைஞன் பொதுமக்களைக் கவனிப்பதில்லை, பொதுமக்கள் இருப்பதையே அறியான்.

ஆஸ்கர் ஒயில்ட்

41. உண்மையான கலைஞன் மனைவி மக்களைப் பட்டினி போட்டாலும் போடுவானேயன்றி தன்னுடைய கலையைவிட்டு வேறு எதையும் செய்யமாட்டான்.

பெர்னார்ட்ஷா

42. உலகத்தில் தங்கள் வேலையைச் சந்தோஷமாகச் செய்பவர் உண்மையான கலைஞரே.

ரோடின்

43. பொதுவாகக் கலைஞர்கள் விஞ்ஞானிகளைவிட இன்பவாழ்வு குறைந்தவரே.

ரஸல்

44. கலைஞன் எதையும் அது உள்ளவாறு காண்பதில்லை, தான் உள்ளவாறே காண்கின்றான்.

டன்னெல்

45. கலைஞன் கவனிக்கவேண்டிய ஒரே விஷயம் தான் ஆக்குவதில் தனக்குப் பிரியமுள்ளதா என்பதே.

பிரௌனிங்

46. எந்தப் பெரிய கலையும் உலகத்தில் வீரர்களிடையேயன்றிப் பிறந்ததில்லை.

ரஸ்கின்

47. எந்த நல்ல கலையும் அழுகில்லாமலிராது, ஆனால் பயனுள்ளவை பல அவ்வாறிருக்கக்கூடும். இருக்கவும் செய்கின்றன.

ஸ்வின்பர்ன்

48. சாதாரண விஷயத்தை உயர்ந்த உணர்ச்சியுடன் காட்டுவதே கலைக்கு உண்மையான ஆற்றல் அளிப்பதாகும்.

மில்லே

49. கலை என்பது தத்துவ நூலுக்கும் விஞ்ஞானத்துக்கும் முற்பட்டது. மக்கள் கண்டு களித்த பின்னரே காரியத்தையும் பயனையும் நாடினர்.

ஆர். எல். ஸ்டீவன்ஸன்

50. எல்லா விஷயங்களிலும் கலையை விரும்பாதவன் கலையை அறவே விரும்பாதவனே.

ஆஸ்கார் ஒயில்ட்

51. கலைக்குக் குறிக்கோள் தேவையில்லை என்பது சன்மார்க்கம் சாத்தானிடம் போய்ச் சேரட்டும் என்பதேயாம்.

நீட்சே


ஒயில்ட்

52. எநத விஷயத்தைதக கொணடு கலை இயறறப பட்டிருக கிறதோ அந்த விஷயம முககிய மனறு, அது எழுப்பும உணர்சசியே முககியமானது.

ஆஸகர் ஒயில்ட்

53. கலையின் தலையாயநோககம பொயயுரைத்தலே. அதாவது அழு கான உணமையல்லாத பொருள் களைக கூறுவதே.

ஆஸ்கர் ஒயில்ட்

54. கலையைக் காட்டுவதும் கலைஞனை மறைப்பதுமே கலையின குறிக்கோள்.

ஆஸ்கர் ஒயில்ட்

55. கலையை எல்லோரும தெரிந்துகொண்டால் அதனபின அது கலையாக இராது.

ஹோரேஸ

56. ஒருவன தான துய்த்த உணர்சசிகளைப் பிறரும துயககுமாறு செயவதே கலையாகும.

டால்ஸ்டாய்

57. எந்தக் கலை தனனுடைய விஷயத்தை மறந்து தனனையே எணணுமோ அந்தக்கலைபோல அறபமானதும ஆகுலம தருவதுமான பொருள கிடையாது.

சாந்தாயனா


செஸ்டர்டன்

58. சாதாரண மக்களுடைய கருத்துக்களைக் கொண்டு வளராத எந்தக் கலையும் நல்ல கலை யாகாது.

செஸ்டர்டன்

59. உயர்ந்த உண்மையொன்று தோன்றுமாறு செய்வதே கலையின் தலையாய தொழில்.

கதே

60. எந்தக் கலைப் பொருளையும் அதனிடமுள்ள குறைகளை வைத்து மதிப்பிடலாகாது.

ஆல்ஸடன்

61. உயர்ந்த கலை என்பதெல்லாம் மனிதன் தன்னுடைய சிருஷ்டியில் இன்பம் காணாமல் கடவுள் சிருஷ்டியில் இன்பம் காண்பதே.

ரஸ்கின்

62. கலை என்பது மனிதனுடைய ஆன்மா துக்கம் துயரம் என்னும் சிறகுகளைக்கொண்டு பறந்து சேகரித்த தேனேயாகும்.

டிரீஸர்

63. நம்மை மறந்திருக்கச் செய்வது — ஆம் அதுவேதான் கலை எப்போதும் குறிக்கோளாகக்கொள்வது.

ஸ்பிங்கார்ன்

64. கலையின் நோக்கம் உள்ளதை உள்ளபடி காட்டுவதன்று, உண்மையை அடிநிலையாகக் கொண்டு இல்லாததை உள்ளதுபோல் காட்டுவதாகும்.

ஜூபெர்ட்

65. கற்றோர் கலையின் கருத்தை அறிவர். கல்லாதவர் அதன் இன்பத்தை உணர்வர்.

குவின்றிலியன்

66. கலை என்பது இயற்கையை அப்படியே சித்திரிப்பதன்று; இயற்கையிடம் இருந்தும் புலனாகாத அழகைக் காட்டுவதாகும்.

ஜேம்ஸ்

67. உயர்ந்த கலை எப்போதும் மதம் பற்றியதே! உயர்ந்த கலைஞர் அனைவரும் சிறந்த தெய்வபக்தராவர்.

பிளாக்கி

68. இறக்கவில்லை, பிரிந்தான், கலைஞன் ஒருபோதும் இறப்பதில்லை.

லாங்பெல்லோ

69. இயற்கை கடவுளுடைய ஆயுதம், கலை மனிதனுடையது.

ஓவர்பரி

70. உயர்ந்த கருத்துக்களை மிகுதியாகப் பயன்படுத்திய கலைஞனே உயர்ந்தவன்.

ரஸ்கின்

# 3. ஓவியம்

71. ஓவியம, இசை, பெண்கள; நான் எபபோதும காதலுடையேன, ஆனால ஒருபோதும அறிந்ததில்லை.

பாஸடனேல்

72. ஓவியத்தைப பறறிக குறைவாக அறிந்தவரே அதன சிறந்த மதிபபாளா.

ஹோகார்த்

73. ஓவியம எனபது பொருளுககும கருத்துககு மிடைப்பட்டதாகும.

கோல்ரிட்ஜ

74. இசையைய மிருகஙகளும சுவைககும. ஓவியத்தை அவை அறியா, அதனால் ஓவியத்தைச் சுவைபபது இசை யைச சுவைபபதிலும உயாந்ததாகும.

ரஸ்கின்

75. ஓவியம் சொறகள உதவியினறிச் செய்த கவிதையாகும.

ஹொரேஸ்

76. ஓவியத்தின சிறப்பு அது மனத்தில் எழுப்பும் உணர்ச்சிகளே. ஓவியத்தைப் பார்ப்பவன முதறகண செயயவேணடியது தன்னிடம உணர்சசிகளை எழுப்பு மாறு விட்டுவிடுவதே.

பீச்சர்


போப

77. இலக்கியத்தின் சொற்கள் காதுககு இனிமை தருவதுபோல் ஓவியத்தின் நிறங்கள் கண்ணுக்கு இனிமைதரும.

பழமொழி

78. பொருளாசை ஓவியன் ஒருவனைககூட உண்டாக்கியதில்லை. ஆயினும அநேகரைக கெடுத்துளது.

ஆல்ஸ்டன்

79. அறிவு ஆய்வுக்கும ஓவியக் கலைககும யாது தொடர்பு?

பிளேக்

80. ஒரு குதிரையின ஓவியமே யாயினும, அது அழகானதாயிருந்தால் அதை நாள் முழுவதும ஆனந்தமாகப் பார்த்துக்கொண்டிருப்பேன்.

சர் தாமஸ் பிரௌன்

81. பதினாயிரத்தில் ஒரு படமே படச்சிலை அறியுமட்டும் பார்ப்பவர்க்கு மகிழ்ச்சி தந்துகொண்டிருக்கும.

ஹாத்தார்ன்

82. சிலையை ஒக்கும ஓவியமே சிறந்ததாகும.

லாங்பெல்லோ

83. கலையை அனுபவிப்பதற்குக கலையின விதிகளை அறியவேண்டியதில்லை. ஓவியங்களைத் தீட்டுவது பாரப்பதற்கே யன்றி விளக்குவதற்காகவன்று.

நெவின்ஸன்

84. உணர்ச்சி மிகுந்தவனே உயர்ந்த ஓவியத்தை உண்டாக்க இயலும.

போப்


ரஸகின

85. இயற்கையைப் பிரதி செய்பவன் ஒருநாளும உயர்ந்த ஓவியம உண்டாக்கமாட்டான.

ரெய்நால்ட்ஸ்

86. உண்மையாக இல்லாதது எதுவும அழகாக இருக்க முடியாது. பிறர் ஓவியத்தைப் பார்த்துத் தீட்டுவது பெயரளவுக்கே ஓவியமாகும.

ரஸ்கின்

87. ஒருவனுடைய ஓவியத்தைத் தீட்டுந்தோறும ஒரு நண்பரை இழக்கினறேன.

சார்ஜெண்ட்

88. ஓவியம எனபது பேசாத கவிதை ; கவிதை எனபது பேசும ஓவியம.

சைமனடீஸ்

89. ஓவியன் எனனுடைய ஓவியத்தைத் தீட்டும போது, எனனைச சிருஷ்டிக்கும்போது நான உடன் இருப்பதுபோலாகும.

அலக்ஸாண்டர் ஸ்மித்

90. நனறுகத் தீட்டிய ஓவியம நனறுகச் சமைத்த உணவை ஒக்கும. சுவைக்கலாம, விளக்க முடியாது.

விளாமிங்க்

91. ஓவியன் ஒருவருடைய ஓவியத்தை உணர்சசியுடன் தீட்டுவானுகில், அந்த ஓவியம ஓவியனுடைய ஓவியத்தையே தீட்டியதாகும.

ஆஸ்கார் ஓயில்ட்

92. உயர்ந்த ஓவியர் ஓவியம் தீட்டவேண்டுமென்று திட்டமிட்டுத் தீட்டுவதில்லை, உள்ளத்தில் பொங்கி எழும் மகிழ்ச்சியே காரணமாகும்.

எமர்ஸன்

93. அதிக சிரமப்பட்டுத் தீட்டிய தாகக் கூறும் ஓவியம் பார்க்கத் தகாத தாகும்.

விஸ்லர்

94. ஓவியம் என்பது சொற்களைக் கொண்டு உண்டாக்கப்படாத கவிதையாகும்.

ஹொரேஸ்

# 4. ஓவியன்

95. அறிவைப் பயன்படுத்தாமல் பயிற்சியின் உதவியைமட்டும் கொண்டு ஓவியம் தீட்டுபவன் இன்ன பொருள் என்று அறியாமல் தன் முன் வைத்த பொருள்களை யெல்லாம் காட்டும் கண்ணாடி போல்வான்.

டா வின்ஸி

96. கடவுள் ஒருவரே ஓவியம் உண்டாக்குகிறார்.

நெல்லர்

(அவருடைய தையற்காரன் தன்மகனை ஓவியனாக்கு மாறு வேண்டிக்கொண்டபோது கூறியது)

97 தனக்குத் திருப்தி தராதிருந்தும் பிறர் புகழில் திருப்தியடையும் ஓவியன் கலைஞனாகான், கருமானேயாவான்.

ஆல்ஸ்டன்

# 5. சிற்பம்

98. சிற்பி உளியைக் கையில் எடுத்தால் சலவைக் கல் அழகு பெறுகின்றது.

பிரையஸ்ட்

99. சலவைக்கல் தேயத் தேய சிலை உருவாகின்றது.

மைக்கல் ஆஞ்சலோ

100. எப்பொழுது சிலை சிந்தனைக்கு எட்டாததாக ஆகின்றதோ அப்பொழுதே அது அழகுடையதாக ஆகின்றது.

எமர்ஸன்

# 6. கட்டடச் சிற்பம்

101. கட்டடச் சிற்பம் என்பது உறைய வைத்த இசையாகும்.

கதே

102. கட்டுவது, ஆம் கட்டுவது கலைகள் அனைத்திலும் சீரியதே.

லாங்பெல்லோ

103. ஒரு நாட்டு மக்களின் நாகரிகத்தின் உறைகல் அவர்களுடைய கட்டடச் சிற்பமே.

பிரஸ்காட்

104. திறமையுள்ள சிற்பிகள் சிறந்த நிலையிலேயே கட்டுவர்.

ரஸ்கின்



ரஸ்கின்

105. கட்டடச் சிற்பம் நித்தியப் பண்புடையது, நிதம் நிதம் மாறும் தத்துவம் முடையதன்று.

கிறிஸ்டோபர் ரென்

106. கட்டடச் சிற்பம் கடவுள் பக்தியின பணிப பெண். அழகான கோவில் கல்லால் சமைத்தபோதனே. அதன் கோபுரம தேவலோகத்தைச் சுட்டும விரல்.

ஷாவ்

107. கட்டடச் சிற்பம் எனனும் கலேயானது கட்டடங்களைப் பார்ப்பதன் மூலம் மனிதனுக்கு ஆறுதலும் ஆற்றலும ஆனந்தமும அளிப்பதாகும.

ரஸ்கின்

108. கட்டடச் சிற்பம் என்பது ஒன்றைப் பார்த்துச் செய்யும கலேகளின் அடிநிலேயாகும்.கட்டடச் சிற்பம எழாத போது கலே மறுமலர்ச்சி உண்டாவதில்லே.

ஷெலஜல்

109. கட்டடச் சிற்பம் எழுப்புகினற மனநிலே இசையால எழும மனநிலேயை ஒக்கும.

கதே

110. கட்டடச் சிற்பம என்பது சாதாரண உபயோகத்துக்குத் தேவையில்லாத அமசங்களைக் கட்டடங்களில் அமைப்பதாகும்.

ரஸ்கின்


பிளேட்டோ

111. கட்டடங்கள் உபயோகமாயுமிருக்கவேண்டும், அழகாயுமிருக்கவேண்டும.

ரஸ்கின்

112. சிறந்த வீடுகள் எழுந்த பின்னரே சிறந்த கட்டடச் சிற்பங்கள் எழமுடியும.

ரஸ்கின்

113. ஓவியத்தைப்போலவே கட்டடச் சிற்பியும் நகரங்களில் வாழ்தலாகாது.

ரஸ்கின்

# 7. இசை

114. இசை உண்டாக்கும் இன்பம இல்லாமல் மனிதன் வாழ முடியாது.

கன்பூஷியஸ்

115. இசையை அன்பு கடந்து துயத்தால் அது உள்ளத்தை உரம் செய்வதற்கு மாறுக ஊறு செய்துவிடும்.

பிளேட்டோ

116. அரசன் இசையில் விருப்பமுள்ளவனு யிருந்தால் நாட்டில் தீமை யிராது.

மென்ஷியஸ்

117. இசையில் பயிற்சி உள்ளவர் நல்ல குணமுடையவராகவும எல்லாக் காரியஙகளுககும தகுந்தவராகவுமிருப்பார்.

லூதர்

118. சில இன்பங்கள் புலன்களால் உணரப்படுபவை சில உள்ளத்தின்பாற் பட்டவை. இசை இடையில் நின்று இரண்டுக்கும் இன்பம் தரும்.

நார்த்புருக்

119. இசை எதற்காக உண்டாக்கப்பட்டுள்ளது என்று அறியாயா? துன்பம் நேர்ந்தபோது அதைத் துடைப்பதற்கே.

ஷேக்ஸ்பியர்

120. எத்துணைக் கல்நெஞ்சு உடையவனையும் இசையானது அந்தக் கணத்திலேனும் இளகிவிடவே செய்யும்.

ஷேக்ஸ்பியர்

121. ஆசைகளை அடக்கிவிடும் இசையும் உண்டு, கிளர்ந்துவிடும் இசையும் உண்டு.

பிரான்ஸிஸ் மீரெஸ்

122. இசையானது அஞ்சனம்போல் இதயத்திலுள்ள புண்களை ஆற்றும்.

போர்டேஜ்

123. இசையால் எழுப்ப முடியாத ஆசைகளுமில்லை, அவிக்க முடியாத ஆசைகளுமில்லை.

டிரைடன்

124. இசை காட்டு விலங்கை மடக்கவும் கல்லை இளக்கவும் மரத்தை வளைக்கவும் வல்லதாகும்.

காங்கிரீவ்

125. இசையும் வெடிமருந்துபோல் அபாயகரமானதே.

காலியர்

126. இசையானது வீரர்க்கு உற்சாக மூட்டும், காதலர் காயங்களை ஆற்றும்.

போப்

127. உள்ளத்தில் அமைதி உடையவரே இசையில் இன்பத்தை அறிவர்.

போப்

128. இசை மகிழ்ச்சியை மிகுவிக்கும், துன்பத்தைக் குறைக்கும், நோயை அகற்றும், கோபத்தை ஆற்றும்.

ஆர்ம்ஸ்டிராங்

129. இசையே! தெய்வீக மங்கையே, இன்பத்தின் சகியே, அறிவின் துணையே.

காலின்ஸ்

130. இசைக்கு இளகாத இதயம் உண்டோ? ஐயோ, அதற்கு விமோசனம் இல்லையே.

பியாட்டி

131. இசையைக் காதால் கேட்டு நீண்டநேரம் ஆன பின்னரும் அதை இதயத்தில் கேட்டேன்.

வோர்ட்ஸ்வர்த்

132. இசை என்பது தத்துவம் உண்மையைக் காட்டுவதினும் விளங்கக் காட்டுவதாகும்.

பீட்ஹோவன்

133. இதயத்திலுள்ள சக்கிமுக்கிக் கல்லே இசையில் நெருப்பை எழுப்ப வல்லது.

பீட்ஹோவன்



தோரோ

**134.** இசை கண்ணீர்ச் சுனையைத் திறக்கும் சாவி. மூளைவெறி கொள்ள மட்டும் ஆன்மா பருகும். அச்சத்தின் தாயாகிய கவலையை உறங்கவைக்கும் மலரணையாகும்.

ஷெல்லி

**135.** இறக்கும்போது இசையைப் பருகட்டும், வேறு எந்த இன்பத்தையும் நான் விரும்பவில்லை.

கீட்ஸ்

**136.** இசையே எல்லா நாட்டு மக்களுக்கும் பொதுவான மொழி.

ரோஜர்ஸ்

**137.** அன்னை குழந்தைக்குப் பாடும் காட்சியினும் அற்புதக் காட்சி யில்லை.

காபெட்

**138.** தலை சிறந்த இசை கடவுளது, அடுத்த இசை இராணுவ இசை, அது சாத்தானுக்குச் சொந்தமாய் விட்டது.

கோல்ரிட்ஜ்

**139.** இசை எல்லா அறங்களினும் உயர்ந்த இடம் பெற்றுவிட்டது. ஆகவே தலையாய சீர்திருத்தக் காரணாக இருக்கின்றது.

தோரோ

**140.** இனியும் பிறப்பதானால் என்னை இசைக்கே தந்துவிடுவேன். அதுவே மலிவானதும் ! தண்டிக்கப்படாததுமான பேரின்பமாகும்.

ஸிட்னி ஸ்மித்



நீட்சே

141. இசைக்கு எந்தச் சொற் களும ஏற்றனவே.

பிஸான்டே

142. இசையைக் கேட்கும்போது எனனிடம அச்சம நிற்பதில்லை, என கண்ணுக்குப்பகைவர் புலனுவதில்லை, என்னை யாரும் வெல்லமுடியாது.

தோரோ

143. இசையைக் கேட்பவர்க்குத் தனிமை என்பது தோனறுவதில்லை.

பிரௌனிங்

144. இசை இயற்கையிடம காணப்படுவதில்லை. இசை மனிதனுடைய சிருஷ்டியே.

ஹாவீஸ்

145. காதலை கூறச்.சொல்லைத் தேடுவதே இசை.

லானியர்

146. இசையே எல்லாக் கலைகளிலும இலட்சியக் கலையேயாகும. இசையில் பொருளையும் வடிவத்தையும பிரிககமுடியாதிருப்பதே காரணம.

வால்டர் பேட்டர்

147. இசை யினறேல் இவ்வுலக வாழக்கை ஒரு பிழையே.

நீட்சே

148. பெரும்பாலோர் சுவைப்பது இசை என்று கூறத்தக்கதன்று. வெறும் மயக்க நிலை தருவதே.

சாந்தாயனு

149. இக்காலத்து இசை யானது, உணர்ச்சி யில்லாமலாக்கும் கொக்கேயன மருந்துபோல் அபாயகரமானது.

மாஸ்கார்னி

150. இசை எனபது ஓர் அற்புதம என்றே கூறுவேன்.

ஹீன்

151. இசையையும கவிதையையும யாரும கற்றுக் கொடுகக முடியாது. திறமையுடையோர் மட்டுமே எட்ட முடியும்.

போலி

152. இசைக்குப் புதுமை தேவையில்லை. பழகப் பழகவே பயன் மிகுதியாகப் பெறுவோம.

கதே

153. மனிதனுக்கு வேண்டிய இனறியமையாத தேவைகள் முதலில் உணவு, அடுத்தது உடை, அதன் பின் உறையுள், அதன்பின் இசை.

போவி

154. மனிதனுடைய இதயத்துக்கு அமைதி தரக் கூடியது இசைக்கலை ஒனறே.

லூதர்

155. இதயத்தை அதிகமாக ஆட்கொள்ளக் கூடியது இசையே. அரசாங்கம அதற்கு அதிகமான ஆதரவு அளித்தல் அவசியம.

நெப்போலியன்

156. இசையைக் கற்கும்போதே இளைஞர்கள் காதல் செய்யக் கற்றுக்கொள்கின்றனர்.

ரிக்கார்ட்

157. மனிதனுக்கும் மற்ற உயிர்களுக்கும் பொது உடைமையாயிருப்பது இசை என்னும் கலை ஒன்றே.

ரிக்டர்

158. இசையானது உடையும் உள்ளத்திற்கு இசைந்த மருந்தாகும்.

லேஹண்ட்

159. இசையானது அன்றாட வாழ்க்கையில் படியும் தூசியைத் துடைத்துவிடும்.

ஆர்பாஷ்

160. இசையைக் கேட்கும்பொழுதோ அல்லது கேட்ட சிறிது பொழுது கழித்தோதான் என்னுடைய துன்பியல் நாடகங்கள் எல்லாம் என் மனத்தில் உருவாயின.

ஆல்பயரி

161. இசை என்னும் மங்கை மக்களைச் சாந்தமாயும் சன்மார்க்கமாயும் நடக்கச் செய்வாள்.

லூதர்

162. இசைக்குப் பரமவிரோதி சாத்தான், ஏனெனில் இசை இதயத்திலிருந்து துக்கத்தையும் தூய்மையற்ற எண்ணங்களையும் நீக்கும்.

லூதர்

163. இசை இதயத்தை இளக்குகிறது, அதன் காரணத்தை அறியக்கூடவில்லை.

லாண்டன்

164. துக்கம் உள்ளத்தைக் கவ்வும்போது இசை ஓடிவந்து விடுவிக்கும்.

ஷேக்ஸ்பியர்

165. அளவு கடந்த அச்சமும் துக்கமும் தவிர இசையால் ஆற்றப்படாத உணர்ச்சிகள் எதுவும் கிடையாது.

ஜார்ஜ் எலியட்



லாங்பெல்லோ

166. இசையானது ஆண்மகன் இதயத்தில் நெருப்பை உண்டாக்க வேண்டும். பெண்மகள் கண்களினின்றும் நீர் சொரியுமாறு செய்யவேண்டும்.

பீட்ஹோவன்

167. காட்டு மிருகத்தையும் சாந்தப்படுத்தக்கூடிய சக்தி இசைக்கு உண்டு.

பிராம்ஸ்டன்

168. கேட்கக் காதிருப்பின் எல்லாவற்றிலும் இசையைக் கேட்கலாம்.

பைரன்

169. தேவதூதர்கள் பேசுவது இசையே என்று கூறுவது முற்றிலும் சரியே.

கார்லைல்

170 இசையே உலகிலுள்ள மக்கள் அனைவர்க்கும் பொதுவான மொழியாகும்.

லாங்பெல்லோ


ஷெல்லி

171. எல்லா மக்களுக்கும் அவர்களுடைய வீட்டிலேயே இனிய இசை ஏற்றவண்ணம கிடைக்குமாறு செய்தால் அதைவிடப் பெரிய நன்மை கிடையாது.

பெல்லமி

172. இசையின்றேல் வாழ்க்கை என்பது ஒரு பிழையே.

நீட்சே

173. பியானோ வாசித்தல் ஆட்சி செய்வதினும் கடினமானதாகும. உணர்ச்சிகளை மக்களிடம எழுப்புவதி னும் தந்தக் கட்டைகளில் எழுப்புவது கடினமாகும.

பாத்ரேஸ்கி

174. இசையைப் பாடுபவர் பாடுவதை நிறுத்தி ஞலும இசையானது இதயத்தில் இயங்கிக்கொண்டே இருக்கும்.

ஷெல்லி

175. இசையே இதர கலைகளினும் மனிதனுடைய நலத்துககு அரண் செய்வதாகும.

ஹெர்பர்ட் ஸ்பென்ஸர்

176. கேட்ட இசை இனிது, கேளாத இசை அதனி னும் இனிது.

கீட்ஸ்

# 8. நடனம்

**177.** நடனமே கலைகள் அனைத்தினும் மிகுந்த மாண்புடையதும் அழகுடையதும் நெஞ்சை அள்ளுவதுமாகும். அதற்குக் காரணம் அதுவே வாழ்வாயிருப்பதுவே.

ஹாவ்லக் எல்லிஸ்

**178.** அறிவுள்ளவன் எவனும் நடனம் பயிலமாட்டான்.

ஸிஸரோ

**179.** நடனத்தை அதிகமாக வேட்பவர் மூளையைத் தலையில் இல்லாமல் காலில் உடையவர்.

டெரன்ஸ்

**180.** நடனம் தெரிந்துகொள்ளவேண்டிய கலைதான், ஆனால் சொற்ப காலத்துக்கே பயனுடையது. எந்தப் பெண்ணும் மணமானபின் நடனமாடுவதில்லை என்றுள்ள பிரஞ்சு நியதி பெண்களின் உடல் நலத்தை ஆதாரமுள்ளதாகும்.

ஜெபர்ஸன்

**181.** நடனம் அறிவுக்கும் ஆரோக்கியத்துக்கும் ஒத்ததே. இளமையில் நல்ல பொழுதுபோக்கு.

காபெட்

# 9. நாடகம்

**182.** நாடகம் எழுதுவது ஒரு பெரிய காரியம். நடிக்கக் கண்டவண்ணம் நடக்குமாறு செய்யக்கூடியது. உலகம் என்பதும் ஒரு பெரிய நாடக மேடையே.

பெர்னார்ட்ஷா

183. அறிவைக் காணவன்றி உடைமையைக் காண வருமவரை நாடகம் செழிக்கப்போவதில்லை.

பெர்னார்ட்ஷா

184. வாழ்க்கை முறையைக் காட்டாத நாடகம் வெறும் பொம்மலாட்டமே.

காஸனர்

185. நாடகம் பார்க்கப் போகாதிருப்பது கண்ணாடியில் முகம் பார்க்காமல் தலையை வாரிவிடுவதை ஒக்கும்.

ஷோபனர்

186. உலகம் முழுவதும் ஒரு நாடக அரங்கு; மக்கள் அனைவரும் அதில் ஆடுபவர்.

ஷேக்ஸ்பியர்

187. இன்ப நாடகத்தைவிடத் துன்ப நாடகமே உயர்ந்த கலைப் பண்பு உடையதாகும்.

மர்ரே

188. நாடகமே பொதுமக்களின் புத்தகமாகும்.

வில்மட்

189. நாட்டு மக்களின் வாழ்க்கை சிறந்ததாக ஆகாத வரை அந் நாட்டு நாடகங்கள் சிறந்தனவாக இரா.

ஆஸ்கார் ஒயில்ட்

190. இசையைப் போலவே நாடகமும் எதையும் கற்பிப்பதுமில்லை, எதையும் உண்மை யென்று நிறுவுவதுமில்லை.

சிஞ்ச்



ஹ்யூம்

191. நாடகாசிரியன் தனனைக் காட்டிக்கொள்ளாமல், தான சிருஷ்டிக்கும பாத்திரஙகளைக் காட்டுவதே அவனுடைய கடமை.

மக்காலே

192 ஓவியரைப் போல் யாரும தமமுடைய தொழிலில் மிகுந்த பற றுடையவராக இருகக நான கண்ட தில்லை. அவர்க்கு அடுத்தபடியாக உள்ளவர் நடிகர்கள். அவர்கள், தாம நடிக்காத காலத்தில் பிறர் நடிப்பதைக் காணப்போவர்.

தாக்கரே

193. நாடகம என்பது மக்கள் இன்பமும அறிவும் பெறத் தக்கவாறு, மனித இயல்பைக் காட்டுவதாக இருத் தல் வேண்டும.

டிரைடன்

194. ஒரு நாடகத்தின் மதிப்பு அது நம்முடைய இரு தயத்தைக கிளறுமளவே

ஹ்யூம்

195. இனப நாடகத்தை நடிககக கணடு களிக்க வேணடும, ஆனல் துனப நாடகமோ வீட்டில தனியே இருந்து படிப்பதே தலைசிறந்த முறை.

லிங்கன்

196. வேறு எந்த நூலிலிருந்து பெறும உதவியினும நல்லதொரு நாடகத்தினின்றே பெறுகின்றேன.

ரஸ்கின்



வால்டேர்

197 ஒருமணி நேரங்கூட பிரசங்கம் கேட்க முடியாதவர்கள் இரண்டு மூன்று மணி நேரமிருந்து நாடகம் பார்ப்பர்.

கௌலி

198 நாடக மேடை வேண்டாம என்பவர் நாட்டுக்கு விரோதியே யாவர்.

வால்டேர்

199. நாடகம் பார்க்கும்போது நல்லொழுக்கத்தை மெச்சுகிறோம், தீயொழுக்கத்தை வெறுக்கிறோம். அதற்குக் காரணம் அப்படிச் செய்வதில் நமக்குச் சிரமம் இல்லை என்பதே.

ஹாஜ்லிட்

# 10. இலக்கியம்

200. ஒரு காலத்தின் இலக்கியம அக்காலத்து மக்களின மனப் போக்கைக் காட்டும ஆடியாகும.

நேஷன்

201. இலக்கியம நாட்டுப் பற்றினாறும் எழுவதாகும. நாட்டுப் பற்று சுயமரியாதை யில்லாதவிடத்து உண்டாகாது. சுயமரியாதை. சுதந்திர மில்லாத விடத்து உண்டாகாது.

ஸடவ்

202. வேலையின் சிறப்புக்குத் தக்க வண்ணம் கூலி கொடாத தொழில் இலக்கியம் இயற்றுதல் ஒன்றே.

புருட்

203. இலக்கியம் பெரிய கொம்புதான், ஆனால் ஊன்றி நடக்க உதவாது.

ஸ்காட்

204. இலக்கியமே வாழ்க்கையின் தொழிலாக இருந்தால் அது துன்பமே. இடையிடையே செய்வதாயிருந்தால் அது இன்பமே.

ரோஜர்ஸ்

205. உலகத்தில் எந்த அறநெறி தவறிய நூலும் இருநூறு ஆண்டுகளுக்குமேல் நிற்பதில்லை.

புல்வெர்

206. இலக்கியத்தின் உயிர்நாடியை அறிய விரும்புவோர் ஏதோ சில நூல்களை ஆய்ந்தால் போதாது, இலக்கியம் ஆதி முதல் இன்றுவரை வளர்ந்து வந்த விதத்தை ஆய்தல் அவசியம்.

கார்பீல்டு

207. விஞ்ஞானமா, புத்தம் புதிய நூல்களைக் கற்க. இலக்கியமா, மிகப் பழைய நூல்களையே கற்க. பண்டை இலக்கியங்கள் என்றும் புதியன.

புல்வெர்

208. இலக்கியமில்லாத நாடு யாருக்கும் விளங்காத நாடேயாகும்.

கார்லைல்

209. இலக்கியம் குன்றுவது மக்கள் குன்றுவதன் அறிகுறியாகும். இரண்டும் ஒரே கதியிலேயே தாழ்ந்து வரும்.

கதே

210. இலக்கியக் கல்வி இளைஞரை வளர்க்கும், முதியவரை மகிழ்விக்கும். செழிப்பான காலத்தில் அலங்காரமாயும், வறுமையான காலத்தில் ஆறுதலாயு மிருக்கும்.

ஸிஸரோ

211. சிருஷ்டித் தத்துவமுள்ள இலக்கியமே அழியாது நிற்கும். இளைஞர்கள் பழையன தவிர வேறு எதையும் படித்தலாகாது.

விப்பிள்

212. இக்காலத்தில் இலக்கிய உலகில் திறமையுள்ள கொத்தர்கள் பலராயும் திறமையுள்ள சிற்பிகள் சிலராயும் உளர்.

ஜூபெர்ட்

213. இலக்கியத் தொழிலில் சிறப்பு அடையவிடினும் பாதகமில்லை. இதர தொழிலில் சிறப்பு அடைவதினும் இது சிறந்ததே.

ஹியூம்

214. எத்துணைச் சிறந்த இலக்கிய கர்த்தர்களும் முன்னோர் வகுத்த முறைகளை மீறிவிட இயலாது.

கார்லைல்


கதே

**215.** இலக்கியம், அறிவு இலக்கியம், ஆற்றல் இலக்கியம் என இரு வகைப்படும். முன்னது அறிவு புகட்டும், பின்னது நெஞ்சை இளக்கும். முன்னது சுக்கான், பின்னது தண்டு.

டிக்குன்ஸீ

**216.** உன்னுடைய இலக்கியங்களை ஒன்பது ஆண்டுகளேனும் வெளியிடற்க.

ஹொரேஸ்

**217.** இதர பொழுதுபோக்குக்கள் இடம், காலம், வஸ்து இவற்றைப் பொறுத்தவை. இலக்கியமோ இளமையில் உற்சாகமும முதுமையில் மகிழ்ச்சியும் தரும்.

ஸிஸரோ

**218.** ஒரு நாட்டின் இலக்கியம் என்பதில் இனிப் பொருளில்லை. உலக இலக்கியம் உதிக்கும் காலம இது. அதை விரைவில் எழச் செய்வோமாக.

கதே

**219.** இலக்கியம் என்பது மொழியானது அமரத்துவம் அடைவதாகும்.

ஷெலஜல்

**220.** திருடர் அழிக்கமுடியாது. நாளாக ஆகச் சிறப்படையும். அழியாத சின்னம் அதுவே.

மார்ஷியல்



ஜான்ஸன்

221. இலக்கிய கர்த்தர் அடையும தனிப்பரிசு தோல்வியுறின் இகழ், வெற்றி பெறின வெறுப்பு எனபனவே.

வால்டேர்

222, இலக்கியமும் சூரியனைப் போலவே நாம் பார்கக விருமபாததையும பார்க்கச் செய்யும் அறிவொளியாகும.

ஜான்ஸன்

223. பணமோ பட்டமோ இல்லாதவரும புகழ் அடைவதற்கான வழி இலக்கியம் இயற்றுவதே.

டிஸ்ரேலி

224. இலக்கியமே என் வாழ்க்கைக்கு இனிமை தருவது. என் விருப்பம்போல் வாழ்க்கை நடத்த முடியுமாளுல் இலக்கியத்திலேயே மூழ்குவேன்.

ஜான் குன்ஸி ஆடம்ஸ்

225. உடை அமைப்பு காலத்துக்குக் காலம மாறுவதுபோல இலக்கிய அமைப்பும் காலத்துக்குக் காலம் மாறும.

டிஸ்ரேலி

226, ஆகாரத்தை நாடி இயற்ருமல் ஆன்மாவின் ஆணைப்படி இயற்றும போதே இலக்கிய சிருஷ்டி என்பது தூய தொழிலாகும.

கிரீலி

227. எழுதுகின்ற பொருள்களாலன்றி எழுதுகின்ற பாணியினால் இன்பம் உண்டாகும்போதே எழுதுவது இலக்கியமாகும்.

ஸ்டாபோர்டு புரூக

228. இலக்கியம் வறுமையை எதிர்த்து நிற்கும், துருப்பிடியாது, திருடமுடியாது. தந்தையிடமிருந்து பெற முடியாததுபோல பிறரிடம் விற்கவும் முடியாது.

லவல்

229. இலக்கியத்துக்கும் பத்திரிகைக்கும் உள்ள வேறுபாடு பத்திரிகை படிக்கச் சுவை தராது, இலக்கியத்தைப் படிப்பதில்லை.

ஆஸ்கார் ஒயில்ட்

230. இலக்கியம் என்பது வாழ்க்கையைப் பிரதி செய்வதன்று, உருவாக்குவதாகும்.

ஆஸ்கார் ஒயில்ட்

231. தன்னைப் பற்றியும் தன்னுடைய காலத்தைப் பற்றியும் எழுதுபவனே எல்லா மக்களைப் பற்றியும் எல்லாக் காலங்களைப் பற்றியும் எழுதுபவனாவான்.

பெர்னர்ட்ஷா

232. இலக்கியம் கைத்தடி யாகுமேயன்றி ஊன்று கோலாகாது.

லாம்

233. இலக்கியம் என்பது சிந்தனை செய்யும் ஆன்மாக்களின் சிந்தனையாகும்.

கார்லைல்

234. இலககியச் சுவை அறியாதவன் வாழ்ந்தாலும் இறந்தவனே.

செனீக்கா

235. இலக்கியத்தொழிலே மிகுதியாக மயக்குவதும் ஏமாற்றுவதும ஆபத்தானது மான தொழிலாகும.

மார்லி

236. ஒரு நாட்டின் இலக்கியம் மிருகக கதைகளில் தொடங்கி நாவல் கதைகளில் முடிவடையும்.

ஜுபெர்ட்

237. எந்த நல்ல காரியத்துக்கும பயன்படாத இலக் கியம தீயதே.

செனிக்கா

238. இலக்கியத் தொழில் இறக்கும் வரை செய்யக் கூடியதாகும.

ஸிஸரோ

239. இலக்கியத்தின் மணமும் சாரமும் தோன்றிய இடத்தைப் பற்றி யாரும அறியார்.

ஹாரிஸ்

240. இலக்கியமே என் சொர்க்கம், என்னை யாரும் கண் குருடு என்று அங்கே விலக்கமாட்டார்கள்.

ஹெலன் கெல்லர்

241. இலக்கிய உலகில் எல்லாம குடியரசே.

மோலியர்


கோல்ரிட்ஜ்

242. இலக்கிய உலகில் கண்டு பிடிக்க வேண்டிய ஒரு பெரிய விஷயம் உளது. இலக்கிய கர்த்தர்களுக்கு அவர்கள் எழுதாத அளவுக்கு ஊதியம் தருவது எனபதே அது.

கார்லைல்

243. வாழ்நாள் வீணாய்விட்டது என்ற எண்ணம் எல்லோருக்கும் துன்பம தருவதே. அந்தத் துன்பம் இலக்கியத்தைத் தொழிலாகக் கொண்டவனுக்கு மிகவும் அதிகமாகும.

கோல்ரிட்ஜ்

244. இலக்கியத் தொழிலை ஒரு வியாபாரமாக எண்ணிவிடற்க.

கோல்ரிட்ஜ்

245, இலக்கியமே தூய இன்பம் தரும் சாதனங்களுள் தலையாயது. கல்வியின் சிறந்த பயன்களுள் ஒன்று அந்த இன்பத்தைத் துய்க்குமாறு செய்வதே.

ஹக்ஸ்லி

246. உலகத்திலுள்ள இலக்கியம எத்துணை அற்பம என்று எண்ண வியப்பாயிருக்கிறது.

ஜான்ஸன்

247. நனறாக ஆராய்ந்தால் அகராதியைப் போன்ற இலக்கியம கிடையாது எனறு கூறுவேன.

ஆஸ்லர்


வால்ட் விட்மன்

248. இலக்கிய கர்த்தா என்ற பேர் பெறுவது அரியாசனம ஏறுவதை ஒக்கும்.

எட்கார் ஆலன் போ

249. இலக்கியத்தின் சாரமான அமசங்கள் பலவாதலால் எந்த இலக்கியத்தையும குறைகள் மட்டும உடையதாகக் கூறமுடியாது.

ஸ்ட்ராச்சி

250. சிறந்த இலக்கியம் என்பது யாது? எல்லோரும் படிக்க விரும்புவதும யாரும் படியாதிருப்பது மாகும!

மார்க் ட்வைன்

251. இன்றுள்ள நாகரிகவாழ்க்கையில் இலக்கியமே தலையாய கலையாக ஆட்சிபுரிகின்றது. மற்றக் கலைகளி லும பயன்படுவதும் அதுவே.

வால்ட் விட்மன்

# 11. கவிதை

252. கவிதைத் திரட்டு என்னும் நூலில் முன்னூறு கவிதைகள் உள. அவைகளின் பொருளை "இழிந்த எண்ணஙகட்கு இடந்தரற்க" என்னும் வாக்கியத்தில் கூறிவிடலாம.

கன்பூஷியஸ்

253. கவிதை என்பது பேசும் ஓவியம்; ஓவியம என்பது பேசாக கவிதை.

சைமனடீஸ்

254. வரலாறு குறிப்பிட்டவற்றைக கூறும், கவிதை பொதுத் தனமைகளைப புகலும.

அரிஸ்டாட்டில்

255. சோர்ந்தவர்க்குத் தூககம இனிதாவது போல் கவிதை காதுககு இனிதாகும.

வெர்ஜில்

256. கவிதை எழுதுவது இயறகையாலா செயறகையாலா என்று கேட்பர். இரண்டும இணைபிரியா வண்ணம் சேருமபொழுதே கவிதை எழும என்பேன.

ஹொரேஸ்

257. கவிதை என்னும தெய்வீக சகதியே! நீயே அனைத்தையும அந்தகனிடமிருந்து காப்பவள். அழியும மக்களுக்கு அழியாவரம அருளபவள.

லூக்கன்

258. பெயர் அழியாது நிறகச் செய்வதறகுக கவிதையைப் போனறது கிடையாது. மறற நினைவுச சினனங்கள் மாய்ந்துபோவன.

பிளினி

259. சிறந்த கவிதையை அறிந்து கொளவதினும சிறப்பற்ற கவிதையைச் செய்வது எளிது.

மாண்டேய்ன்

260. உளளத்தை உயர்த்துவதால் கவிதையைக கடவுள் தனமை வாயந்தது எனபா.

பேக்கன்

261. கவிதை கெட்டவனை நல்லவனாக்கும், கோழையை வீரனாக்கும், அயோக்கியனை யோக்கியனாக்கும்.

பீச்சாம்

262. சிலரே சிறந்த கவிஞராக முடியும், சிறந்த கவிதை எழுத முடியாதவன் செய்யத் தகாத வேலையில் ஈடுபடுவன.

வார்ட்

263. கவிதை என்பது தேவதூதர் பேச்சு, அன்பின் மொழி. ஆனால் மக்கள் அதைப் பாழ்படுத்து கின்றனரே !

டிரைடன்

264. கவிதை என்பது காதலின் மகள்.

பாண்டனெல்

265. களிப்பே கவிதையின் ஒரே நோக்கமாகயில்லா விடினும் முக்கிய நோக்கமாகும். கற்பித்தல் இரண்டாம படியிலுள்ளதே. கற்பித்தலும களிப்பூட்டுவதினாலேயே.

டிரைடன்

266. கவிதா உலகத்தில் தங்கச் சுரங்கம் கிடையாது. அங்குள்ள காற்று இனிது, மண் வறண்டது.

ஜான் லாக்

267. கவிதை காதுக்குக் கடூரமாக இல்லாதிருந்தால் மட்டும் போதாது. ஓசை பொருளின் எதிரொலிபோல் தோன்றவும் வேண்டும்.

போப்


லாம்

268. காதலே கவிதையின் தாய, காவறகாரனையும கடவுளர் போல் பேசச் செயயும.

அடிஸன்

269. கவிதை செய்யாமலிருக்க முடியாது எனற நிலையிலுள்ளவரே கவிதை செய்ய முயலலாம, அத்த கையவரை கவிதை செய்யாதிருககச் செய்ய முடியாது.

பிரயர்

270. கவிதை என்பது யாது? எது கவிதை யில்லை என்பதையே எளிதாகக் கூற இயலும். ஒளி என்பது என்னவென்று அறிவோம், ஆனால் கூற இயலாது.

ஜான்ஸன்

271. கவிதையை மொழி பெயர்க்க முடியாது, அதனால் கவிஞரே மொழியைக் காத்துவருபவர். இப்படியின்றேல் மொழி பெயர்ப்பைப் பயனபடுத்தி மொழியைக் கற்கா திருந்துவிடுவோம.

ஜான்ஸன்

272. எவனாயினும கவிதைக்குச் செவிசாய்க்க இயலாதவன மனிதப் பண்பு இல்லாதவனே.

கதே

273. கவிதையின் இசை கவலைகளை மறக்கச் செய்யும். ஆனால் கவலைகள் உளளவன் அந்த இசையைச் செய்ய முடியாது.

லாம்



கீட்ஸ்

274. கவிதையானது நன்ருகப் புரியாமல் பொதுவாகப் புரியும் போதே இன்பம் தருவதாகும்.

கோல்ரிட்ஜ்

275. உணர்ச்சியை அமைதியாக நினைவுகூரும்போதே கவிதை உண்டாகின்றது.

வோர்ட்ஸ்வர்த்

276. அன்ருடத் துன்பங்களை மறந்து அமைதி பெறச செயவதே கவிதையின் நோக்கம்.

கிராப்

277. கவிதையின தலையாய நோக்கம் கவலைகளை ஆற்றவும உள்ளத்தை உயர்த்தவும கூடிய நண்பனுக இருப்பதே.

கீட்ஸ்

278. அநேகர் கவிதை மூலம போதிப்பதை துன் பத்தை அனுபவித்தே அறிந்து கொள்பவராயுளர்.

ஷெல்லி

279. கஷ்டப்பட்டுக் கவிதை எழுதுவதில் காலத் தைதக கழிப்பதினும கழிவு ஓடைகளைக் கழுவுவது நல்லது.

பைரன்

280. கவிதை என்பது அறநூலுக்கும் அரசியல் நூலுக்கும் அடங்கியதே.

ஷெல்லி

281. நாகரிகம், முன்னேற்றம் அடைய அடையக் கவிதை நலிவு அடைகின்றது.

மக்காலே

282. கவிதை வேண்டுவது ஆராயு மனநிலை யன்று, நம்பும் மனநிலையே.

மக்காலே

283. கவிதை என்பது அறிவுக்கும் மேம்பட்டதே, ஆயினும் அது அறிவாகவும் இருத்தல் அவசியம். அரண்மனை வீட்டினும் மேம்பட்டதாயினும் வீடாக வேனும் இருத்தல் அவசியமன்றோ?

கோல்ரிட்ஜ்

284. கவிதையில் இசையேனும் பொருளேனும் இருத்தல் வேண்டும். இவை யில்லையெனில் என் மனம் அதில் செல்வதில்லை.

கோல்ரிட்ஜ்

285. மனத்தைக் கொள்ளை கொள்ளாதது கவிதை யன்று.

ஜூபர்ட்

286. சிறந்த உணர்ச்சிகளுக்குச் சிறந்த காரணங்களைக் கற்பனை மூலம் காட்டுவதே கவிதையாகும்.

ரஸ்கின்

287. மிகுந்த அழகாகவும் மனத்தில் பதியும் படிக்கும் பரந்த பயன தருவதாகவும் சொல்லக்கூடிய முறையே கவிதையாகும்.

மாதியூ ஆர்னல்ட்

288 கவிதையிடம் வெளிப்படையாகத் தோன்றும் பொருள தவிர வேறு பொருளும் உண்டு.

டாலாஸ்

289. கவிதை எல்லாம் படிக்கக் கடினமானதே.

பிரௌணிங்

290. கவிதையில் எப்போதும் பொருள் ஐயப்பாடு காணப்படவே வேண்டும்.

ஹாரெட்

291. உள்ளத்தில் உணர்ச்சி மிகும்போது கவிதை பிறக்கும்.

மெல்லார்மி

292. கவிதை கருத்துக் கேற்ற இடமன்று.

ஹௌள

293. கவிதை இசையினின்றும் வெகுதூரம விலகுமாயின இறந்துபோகும்.

எஜ்ரா பவுண்டு

294. கவிதைக்கு எதிர்மொழி வசனமன்று. கவிதைக்கு எதிர்மொழி விஞ்ஞானம, வசனத்திற்கு எதிர்

மொழி யாப்பு. விஞ்ஞானத்தின நோககம உணமையைக கூறுவது; கவிதையின நோக்கம இன்பம தருவது.

கோல்ரிட்ஜ்



பர்க்

295. வெறுங கருத்துக்களை 'வசன நடையில் கூறினல் அழகாயிருககும, செய்யுள் நடையில் கூறினல் சிரமமே தரும.

ஷெல்லி

296. தலை சிறந்த காவியம் சாமர்த்தியமாகச் செய்யப் பட்டதன்று, கவிதை நிறைந்ததாகும்.

ஜார்ஜ் மூர்

297. கவிதை என்பது சாயைகளுக்கு உருவங் தருவதும, இன்மைக்கு உண்மை தருவதுமாகும்.

பர்க்

298. கவிதை என்பது சொற்களாலாய இசை இசை என்பது ஒலிகளாலாய கவிதை.

புல்லர்

299. கவிதை என்பது சிறந்த குழம்புதான் ஆனல் அதையே உணவாகக் கொள்பவர் வறிஞராகவே வாழ்ந்து வறிஞராகவே இறப்பர்.

புல்லர்



மூர்

300. கவிதையின் நோக்கம சரியாகச் சிந்திக்கச் செய்வதன்று, உண்மையாக உணர்ச்சிபெறச் செய்வதாகும.

ராபர்ட்ஸன்

301. கவிதை என்பது, கருத்தின் இசை மொழியின் இசையில உருவாவதாகும்.

சாட்பீல்டு

302. செய்யுள் செயவதினும் உரைநடை எழுதுவதற்கே மிகுந்த மொழித்திறமை தேவை.

வீபர்

303. உன்னுடன் கவிதையைக் கொண்டுவராவிடில் ஓரிடத்திலும் கவிதையைக் காணமாட்டாய்.

ஜூபர்ட்

304. கவிதை என்பது அறிவினால் ஆவதன்று. அறிவு யாது பயன் என்று கேட்கும், இந்தக் கேள்வி ரோஜாவைக் கொல்லும, காபேஜுக்கு வெற்றிதரும.

லவல்

305. எல்லாப் புகழாசையினும கவிப் புகழாசையே கனவிலும் நிறைவேறாதது.

கோல்ட்ஸ்மித்

306. கவிதை துக்கத்தின் சகோதரி. துக்கம் துய்ப்பவன ஒவ்வொருவனும கவிஞனே. ஒவ்வொரு கண்ணீர்த்

துளியும் ஒரு செய்யுள், ஒவ்வொரு இதயமும ஒரு காவியம்.

ஆண்ட்ரே

307. நான் கவிதையால் அடைந்துள்ள நனமை அளப்பரிது. என்னைச் சூழ்ந்துள்ளவற்றில் எல்லாம நனமையையும அழகையும கண்டுபிடிக்கும ஆசையைத் தருகின்றது அது.

கோல்ரிட்ஜ்

308. உள்ளத்தில் ஆழ்ந்து ஊறிய உண்மையை உரைப்பதே கவிதை.

சாப்பின்

309. சிலர் கவிதை மூலம உண்மையைக் காண்பர்; சிலர் உண்மை மூலம கவிதையைக் காண்பர்.

ஜூபர்ட்

310. கவிதை எனபது கடவுள் தன்மையுடைய ஒன்ருகும். கவிதையை உணரும்தோறும கடவுள் தன்மை அடைவோம.

பெய்லி

311. கவிதை எளிதில் காற்ருகும பொருள. அதனுலேயே அதை ஒரு மொழியிலிருந்து மற்ெருரு மொழியினுள பெயயுமபோது அது காணுமற போகின்றது.

டென்ஹாம்

312. ஒரு வரிகூடக் கவிதை எழுதாவிட்டாலும் கவிதையை உணர்வதில் உன்னத இன்பம காண்பவனும உணமையான கவிஞனே.

டூடிவாண்ட்

313. கடவுள் மக்களை நெஞ்சில் வைத்துள்ள உண்மையையும அழகையும காட்டி மககளை நலலோர் ஆககுவதே கவிதை.

லவல்

314. கவிதை சிறிது விளங்காவிடினும பாதகமில்லை, உணர்ச்சிகளை எழுப்புவதில் ஓவியத்திறும மிகக ஆறறலுடையதே

பார்க்

315. ஆசையில் பிறந்த கவிதை உள்ளத்தைக் கெடுக்கும். உள்ள நிறைவில் பிறந்த கவிதை எப்போதும் உள்ளத்தை உயர்த்தும.

ஹாப்கின்ஸ்

316. கவிதையின் ஒரு சிறப்பை எல்லோரும் ஏறறுக்கொள்வர். கவிதை வசனத்திலும் பெருகிய பொருளைச் சுருஙகிய சொல்லில் கூறும.

வால்டேர்

317. அற வுரைகள மறந்துபோகும, கவிதை மனத்தில் தஙகும.

கைல்ஸ்

318. ஒரு கவிதை எல்லோர்க்கும விளங்கவில்லை என்பதனுல் அதை விளங்காத கவிதை எனறு கூறறக. யாருக்காக இயற்றப்பட்டதோ அவருக்கு விளஙகிறுல் போதும.

கோல்ரிட்ஜ்


எமர்ஸன்

319. பொருளே கவிதையின் உடல், கற்பனையே அதன் ஆன்மா.

கோல்ரிட்ஜ்

320. சொற்களைச் சிறந்த முறையில் அமைப்பது உரை நடை, சிறந்த சொற்களைச் சிறந்த முறையில் அமைப்பது கவிதை.

கோல்ரிட்ஜ்

321. எந்த நூலையேனும் படிக்கும்போது என்னுடைய தலையைக் கழற்றிவிட்டதுபோல் உணர்வேனானால் அதுவே கவிதை.

டிக்கின்ஸன்

322. சுருங்கிய சொற்களேயாயினும் பெருகிய ஆற்றல் உடையன என்பதைக் கவிதை காட்டும். கவிதா உணர்ச்சி மிகுமளவு சொற்கள் குறையும்.

எமர்ஸன்

323. கவிதையில் நல்லது கெட்டது என்ற இரண்டு வகைகளே உள்ளன.

கதே

324. படிக்கும் கவிதை தனனுடைய உயர்ந்த கருத்துக்களையே கூறுவதாகப் படிப்பவனை எண்ணுமாறு செய்வதே உண்மையான கவிதை.

கீட்ஸ

325. மேதையின் சிறப்பு நாகரிக காலத்தில் சிறந்த காவியம இயற்றுவதே.

மக்காலே



லாண்டார்

**326.** கவிதையை எப்படித் துவக்குவது என்று அறியும் கலை பெரிது. அதனினும் பெரிது எப்படி முடிப்பது என்று அறியும் கலையாகும். அநேக காவியங்கள் அனாவசியமான செய்யுட்களால் அழகு கெட்டு விடுகின்றன.

லாங்பெல்லோ

**327.** இறக்கும் மங்கையர்க்கும் இறவா இளமை தருவது கவிதையே.

லாண்டார்

**328.** எத்துணை வேலையிருப்பினும் சில நிமிஷ நேரமேனும் கவிதை படித்து உள்ளத்தை உற்சாகப்படுத்திக் கொள்ளத் தவறாதே.

நார்ட்டன்

**329.** கவிதை என்பது அமைதியான உள்ளத்தினின்று மெல்லியதாக வரும் இழையாகும்.

ஆவிட்

**330.** தன்னுடைய பொருளாலன்றி வடிவத்தாலேயே இன்பம் பயக்கும் ஆற்றலுடைய இலக்கியம் எல்லாம் கவிதையே.

வால்ட்டர் பேட்டர்

**331.** கவிதையினும் நீடுவாழ் கற்சின்னங்கள் கிடையா.

ஷேக்ஸ்பியர்

332. உன்னுடைய பாடல்களை நிலைத்து நிற்க வேண்டுமாயின் அந்த மாளிகையை மனித இதயத்தின் மீது கட்டுவாய்.

பிரௌனிங்

333. ஒரு மொட்டு பறவைகளின் குரலினும் நீடு நிற்கும், ஒரு பாடல் உலகத்தின் செல்வத்தினும் நீடு நிற்கும்.

கோவன்

334. கவிதை என்பது அழகினிடம் வாசம் செய்யும் உண்மையாகும்.

ஜில்பிலான்

335. செயின்ட் பால் கோவில் கட்டுவதினும் சிறந்த பாடல் ஒன்று இயற்றுவதையே விரும்புவேன்.

அலக்ஸாண்டர் ஸ்மித்

336. எனக்குப் பணம் வேண்டாம், பாடல் புத்தகம் ஒன்று போதும்.

ஷேக்ஸ்பியர்

337. பிரார்த்தனையின் பின் வரும் கடவுள் அருள் போல் கவலை என்னும் நாடித் துடிப்பை ஆற்றும் சாந்தி தரும் பாடல்கள் தேவை.

லாங்பெல்லோ

338. மக்கள் இதயத்தை நெகிழச் செய்து மீண்டும் தேவலோகம் வருமாறு செய்வதற்காகவே கடவுள் கவிஞர்களை அனுப்புகின்றார்.

லாங்பெல்லோ

339. கவிஞர்களே! பாடகர்களே! உங்களை அறியாத கவிகளுக்காக உங்களுக்கு என்னுடைய நன்றி.

எக்ஸ்சேஞ்ச்

340. பண்டைக்காலத்தில் கவிஞனின் எழுதுகோல் பறக்கும் பட்சியின் இறகு. இக்காலத்தில் இரும்பால் செய்தது.

ஆடம்ஸ்

341. கவிஞன் அழகாகக் கற்பனை செய்யுமளவு நீயும் செய்யாவிடில் கவிஞனுக்கும் அவனுடைய கவிதைக்கும் தீமை செய்பவனாவாய்.

ஆல்ட்ரிச்

342. கற்பனையில் ஆழ்ந்த கவிஞரே! உமது விருப்பம்போல் இயற்றும், ஊரார் கூறுவதை வேண்டற்க

ஆல்ட்ரிச்

343. கவிதை என்பது மிகுந்த அழகுள்ளதும், நன்கு பதிவதும், சிறந்த பயன் தருவதுமான முறையில் கூறுவதே, அதனாலேயே அதன் சிறப்பு.

மாதியூ ஆர்னல்ட்

344. கவிஞன் காட்டியிருப்பதினும் மிகுதியாகக் காண முடியாதவர் எவரும் கவிதையைப் படித்தலாகாது.

ஹாத்தார்ண்

345. கவிதை என்பது எல்லாக் கலைகளுக்கும் தமக்கை, பலவற்றின் தாய்.

காங்கிரீவ்

346. கவிதை என்பது இசையுடன சேர்ந்த சிந்தனையே.

கார்லைல்

347. நாட்டு மக்களுக்கு உற்சாகம ஊட்டும பாடலும் நல்ல செயல் செய்வதே.

டெனிஸன்



டெனிஸன்

348. கவிதையானது அறநூல் அரசியல் நூல் இரண்டின் ஆட்சிககும உட்பட்டதே என்று கருதுகின றேன.

ஷெல்லி

349. வாசிப்பவன் எவன் ஒளி பெறுகின்றானே அவன உண்மையிலேயே கவிதை ஆய்விடுகின்றான்.

டாம்லின்ஸன்

350. கவிதையின் ஒரு பண்பை யாருமமறுக்கார். அது வசனத்தினும் குறைந்த சொற்களைக்கொண்டு மிகுந்த பொருளைக் கூறுகின்றது.

வால்டேர்

# 12. கவிஞன்

351. கவிஞர்கள் தாம் அறியாத பேருண்மைகளைக் கூறுவர்.

பிளேட்டோ


ஸ்விப்ட்

352. உணர்ச்சி வெள்ளத்தில் தோய்ந்து அதைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்குமளவே கவிதை எழுவதாகும்.

புல்வெர்

353. கவிதை புகழ்பெற்றாலும் பெறாவிட்டாலும் கவிஞன் ஆறுதலும் ஆனந்தமும் பெறுவான்.

ஸ்டெர்லிங்

354. கவிஞர்கள் யாரைப்பற்றிப் பாடினும் தங்கட்கே அமரத்வம் தந்துகொள்கின்றனர்.

ஸ்விப்ட்

355. பேருண்மைகளை உணர்ந்து காதலித்து உரைப்போர் அனைவரும் கவிஞரே.

பெய்லி

356. இலக்கிய அறிவு பெற்ற நாகரீக சமூகத்தில் சிறந்த கவிஞனாக விரும்புபவன் முதலில் சிறு குழந்தையாக ஆகக்கடவன்.

மக்காலே

357. கவிஞர் எனப்படுவோர் மக்கள் அனைவராலும் போற்றப்படற் குரியர்.

ஹோமர்

358. கவிஞருடைய ஆற்றல் அறிவால் உண்டாவ தன்று, அருள பிரசாதமே.

சாக்கரட்டீஸ்

359. காதலில் கவிழ்ந்தவர் அனைவரும கவிஞரே.

பிளேட்டோ

360. எவனும இமமியளவேனும பைத்திய குண மில்லாமல் பெரிய கவிஞன ஆக முடியாது.

டெமாககிரிட்டீஸ்

361. கவிஞர்களே மக்களுக்கு முதன் முதல் தோன் றிய ஆசிரியராவர்.

ஹொரேஸ்

362. தவருக எழுதும கவிஞனைப்போல் தானே பெரியவன என்று கருதுபவன் இடையான்.

மார்ஷியல்

363. கவிஞன் என்பவன் கவிஞனுகவே பிறப்பவன், கல்வி கற்றுக் கவிஞன் ஆகிறவனல்லன்.

பிளோரஸ்

364. உள்ளத்தில் காதல் உண்டாகாதவரை எந்தக் கவிஞனும் கவிதைஎழுத எழுதுகோலைக் கையில் எடுக்கத் துணியான்.

ஷேக்ஸபியர்

365. கவிஞன் வெறிகொண்டு விண்ணையும் மண்ணையும் நோக்குவான். கண்கள் காணாதவற்றைக் கற்பனை உருவாக்கும். எழுதுகோல் இல்லாதவற்றை இருப்பனவாகச் செய்யும்.

ஷேக்ஸ்பியர்

366. உலகத்தில் தோன்றும் எழுத்தாளர்களுள் கவிஞனே பொய் கூறாதவன்.

பிலிப் ஸிட்னி

367. சான்றோனாக இல்லாதவன் எவனும் சிறந்த கவிஞன் ஆக முடியாது.

பென் ஜான்ஸன்

368. உயர்ந்த பொருள்களைச் சிறந்த முறையில் எழுத விரும்பும் கவிஞன் தன்னுடைய வாழ்க்கையை ஓர் உண்மையான கவிதையாகச் செய்துகொள்ளக் கடவன்.

மில்டன்

369. கவிஞன் தொழில் கடிகாரம் செய்பவனுடைய தொழிலைப் போன்றது, இரும்பு கடிகாரம் செய்பவனுடையதன்று. அதுவன்று கடிகாரத்தின் முக்கிய பகுதி. அதன் வேலைப்பாடே.

டிரைடன்

370. உண்மையான கவிஞரே நாட்டைப் பாதுகாப்பவர்.

டில்லான்

371. ஒரு கவிஞன் மற்றொரு கவிஞனுடைய செய்யுட்களைப் புகழ்ந்தால் இருவரும் முட்டாளகள், எவ்விதத்திலும மதிப்புடையவரல்லர் என்று தெரிந்துகொள்க.

லாபுரூயர்


அடிஸன்

372. அழுக்காறு அதிகமாக ஆட்சி செய்வது அழகாகக் கவிதை செய்யாத கவிஞர்களிடையே தான.

அடிஸன்

373. அழகாக ஓவியம தீட்டத் தெரியாதவர் அணிகளைத் தீட்டுவது போலவே தாழ்ந்த கவிஞரும செய்வர்.

போப்

374. சிறந்த கவிஞனுடைய தலையாய பண்பு நல்ல பண்புடையவனா யிருத்தலே.

ஸ்டீல்

375. ஏழைகளை முகஸ்துதி செய்பவர் கவிஞரை முகஸ்துதி செய்பவரே.

போப்

376. கலைத் தெய்வங்களுடன் வாழபவன கட்டாந்தரையிலேயே மாள்வான்.

புல்லர்

377. தாம் உண்டாக்கும பொருளில் தலைகால் தெரியாமல் காதல் கொள்பவர் கவிஞர் மட்டுமே.

புல்லர்


பர்ன்ஸ்

**378.** அறிவுள்ளவன் எவனும் முயற்சியாலும பயிற்சியாலும் எத்தகையவனும் ஆகலாம, கவிஞன ஆவதைத் தவிர.

செஸ்டர்பீல்டு

**379.** கவிதை செய்து பிழைக்க முடியுமாளுல், கவிஞனுக இருப்பது இனியதே.

கோல்ட்ஸ்மித்

**380.** தத்துவ உண்மைகளை எழுதும கவிஞர் கல்வி மிகககவரே, ஆனுல் அவர்கள எழுதுவது கவிதையனறு, வெறும செயயுளே.

ஜாண்ஸன்

**381.** நான காதலில் கவிழ்ந்த சமயமவரை கவிஞன ஆகவேண்டும என்ற எண்ணம எனககு இமமியளவுகூட உண்டானதில்லை.

பர்ன்ஸ்

**382.** கவிதை உயிர்க்கும் வேதனையில் உண்டாகும் இனபத்தைக் கவிஞரே அறிவர்.

கௌப்பர்

**383.** கவிஞன் என்பவன் உணர்ச்சியும உற்சாகமும அன்பும மிகுந்தவன். மனித இயல்பை நன்குஅறிந்தவன். ஆனம வாழவில் ஆனந்தம காண்பவன்.

வோர்ட்ஸ்வர்த்

384. கவிஞன் என்பவன உலக வாழ்க்கையில் உழல்பவரை உன்னத லட்சியத்துக்கு உயர்த்துபவன்.

கிராப்

385. என் மகனிடம கவிதா சகதி யிலலையெனில் ஏதேனும வேறு தொழில் பார்ககுமாறு கூறுவேன.

வால்டர் ஸ்காட்

386. எந்த மனிதனும பெரிய தத்துவ சாஸதிரியாக இல்லாமல் பெரிய கவிஞனாக ஆனதிலலை.

கோல்ரிட்ஜ்

387. ஆனமாவில் இசை யில்லாதவன எவனும் ஒருபொழுதும உணமையான கவிஞனாக ஆக முடியாது.

கோல்ரிட்ஜ்

388. மிகுந்த அழுககாறுடையான எனறு கேளவியுறறவன ஒரு கவிஞன, உயர்ந்த கவிஞன.

பைரன்

389. கவிஞன என்பவன இரவில் தனிமையாக உட்காாந்து தனிமையைச் சகிப்பதறகாக இனிமையாயப பாடும இரவுப் பறவையாகும.

ஷெல்லி

390. கவிஞர்கள பொறுமையுடையவர் எனறு கூறுவது பொய. சிறந்த கவிஞர்களை நேரில் அறிவேன. அவர்கள ஒருவர் கவிதையை ஒருவர் போறறவே செயதனா.

லாம்

391. கவிஞர்கள் அரசியலில் கலந்து கொள்வதுமில்லை, கலந்துகொள்ள விரும்புவதுமில்லை. ஆயினும் மின்சாரம் வெகு தொலைவிலும் பாய்வதுபோல அரசியல் அவர்களைப் பாதிக்கவே செய்யும்.

மக்காலே

392. ஒரு கவிஞன் மற்றொரு கவிஞனைப் போல் எழுதினால் என்ன? வாழ்க்கைச் சட்டங்கள் ஒன்றுபோல்வன. அங்ஙனமிருக்க அவர்கள் கவிதைகள் எப்படி வேறுபட இயலும்?

கதே

393. இலக்கியத் தொழிலைப் பிழைக்கும் வழியாகக் கொண்டவுடன் தற்பெருமையையும் புகழாசையையும் அகற்றிக் கொண்டேன்.

வால்டர் ஸ்காட்

394. உள்ளத்தில் காதல் இல்லாத கவிஞன் என்பது இருக்கவும் முடியாது, எண்ணவும் முடியாது என்னத் தகும் பொருளாகும்.

கார்லைல்

395. கவிஞன் உள்ளத்தின் ஆழத்தைக் காண முடியாது. அத்துணைத் தெளிவும் ஒளியும் உடையது.

டெனிஸன்

396. எந்தக் கவிஞனும் கவிதா உணர்ச்சியில்லாதவரிடையிலேயே பிறக்கின்றான். அவரை எதிர்த்தே ஆன்ம சுதந்திரம் அடைகின்றான்.

கார்லைல்

397. நெருப்பு நெருப்பைப் பற்ற வைப்பதுபோல் ஒரு கவிஞனுடன் சேர்ந்த கவிஞன் உள்ளம், சுடர் விட்டெரியும்.

கெபிள்



வோர்ட்ஸ்வர்த்

398. இருபத்தைந்து வயதுக்குள் சிறந்த கவிதை இயற்றாதவன் எந்த நாளும் இயற்றப் போவதில்லை.

வோர்ட்ஸ்வர்த்

399. எல்லோரும் இதயத்தில் கவிதையுணர்ச்சியுடையவரே. அவர்க்கு வயிறறுப்பாடே பெரிது, ஆயினும் அழகு அவர்களைச் சில சமயங்களில் ஆட்கொண்டு விடவே செய்கின்றது.

எமர்ஸன்

400. கவிஞனுக்கு எல்லாப் பொருள்களும் புனிதமானவை, எல்லா நிகழ்ச்சிகளும் பயனுடையவை, எல்லா மக்களும் தெய்வீகமானவர்.

எமர்ஸன்

401. கவிஞனுடைய விரல்கள் பட்டதும் சொற்கள் சுடர்விட்டு எரிகின்றன.

ஜூபெர்ட்

402. உலகத்தில் தலையாய நிகழ்ச்சி ஒருகவிஞன் பிறந்தான் என்பதே.

எமர்ஸன்


ஸ்டீவன்ஸன்

403. மேதையில்லாத கவிஞன் என்று கூறுவது முரணபட்ட சொற்றொடரே.

எட்கார் ஆலன்போ

404. கவிஞர்களே! காதலே நும குதிரை. அதைவிட்டு வேறு எதையும நாடாதீர்.

லாண்டார்

405. கவிஞன் தொழில் அறநூல் கூறுவதன்று.

வால்ட்டர் பேட்டர்

406. கவிஞன் மிகச் சிறந்த அனுபவங்களைக் கூறுகின்றான்.

எமர்ஸன்

407. கவிஞன் கூறுவது பயன் தரவேண்டுமானல் கேட்போர் உள்ளத்தில் ஏற்கனவே உள்ளதையே கூற வேண்டும.

ஸ்டீவன்ஸன்

408. கவிஞன் வருங்காலத்தில் வாழ்பவனுகவுமிருத்தல் வேண்டும்.

லவல்

409. வாழ்வில் ஒருபொழுதேனும் கவிஞனுக ஆகாதவன் வாழ்ந்தவனுகான.

லாமார்ட்டைன்

410. கவிஞன் கடன் வாங்கலாம், ஆனால் கடன் வாங்குவதே கடனை இறுப்பதாக இருத்தல் வேண்டும்.

கோல்ரிட்ஜ்

411. உலகத்தில் எஞ்சி நிற்பவன் அரசனோ வீரனோ அல்லன், பட்டினி போட்டுப் பழித்த கவிஞனே.

ஹாத்தார்ன்

412. சிறந்த கவிஞன் என்பவன் கவிஞனாகப் பிறந்ததோடு பயிற்சியும் பெற்றவனே.

பென் ஜான்ஸன்

413. மூத்த அறிவுடைய கவிஞனே மிகுந்த இன்பம் தரும் கவிஞன்.

கில்மோர்

414. கவிஞரே உண்மையின் ஆழத்திலிருந்து அறிவைக் கொண்டுவந்து தருபவர்.

லவல்

415. பத்திரிகைக் கவிஞனைப் பாமரனும் அறிவான். தெளிவில்லை எனில் அவன் பெரிய பத்திரிகைகளில் இடம் பெறுவான்.

மக்கார்தி

416. உளக் கோளாறு ஓரளவு இல்லாதவன் கவிஞனாகவும் இருக்க முடியாது, கவிதையைத் துய்க்கவும் முடியாது.

மக்காலே

417 ஒருவன் யோக்கியனாகவும் இருக்கலாம், அதே சமயத்தில் மோசமான கவிதை இயற்றவும் செய்யலாம்.

மோலியர்

418. கடவுள் சிலரைக் கவிஞராகச் சபித்தது மனித குலத்துக்குப் பெரும் பேறே.

மூர்

419. முகஸ்துதிக்கு மயங்காத கவிஞர் இலர். ஆம் பிறர் மெச்சுவதற்காகப் பாடுபடும் பைத்தியக்காரர்.

ஸ்காட்

420. செய்யுள் செய்து விற்பதினும் சிறந்தது பூனைக்குட்டியாயிருந்து மியா என்று கத்துவதாகும்.

ஷேக்ஸ்பியர்

421. நீ இறக்கமாட்டாய், என்னுடைய எழுது கோலுக்கு அத்துணை ஆற்றலுண்டு.

ஷேக்ஸ்பியர்

422. எல்லோரும் ஏற்றுக்கொள்வதில்லையே தவிர, கவிஞரே மக்களுக்கு வேண்டிய சட்டங்களை இயற்றுபவர்.

ஷெல்லி

423. உங்களிடம் ஊதியம் பெறும் பணியாட்கள் உங்களைப் பற்றிப் பத்திரிகையில் எழுதுவதுபோல் நாங் களும் எழுதுவோம் என்று எண்ணற்க. நாங்கள் கவி ஞர்கள், உண்மையையே உரைப்போம்.

ஸிட்வெல்

424. கவிஞர்கள் எழுதி அழித்ததை எல்லோரும் அறிந்தால் இப்போது பெறும் புகழில் பாதியே பெறுவர்.

வாலர்



கௌப்பர்

425. கவிஞன நாட்டின் பண்பில் ஆழ்ந்ததுபோல், கவிஞனுடைய பண்பில் நாட்டு மக்கள ஆழ்ந்து போவார்களானல் அதுவே அவனைக கவிஞன் என்று கூறுவதாகும.

வால்ட் விட்மன்

426. மாண்புடைய கவிஞர் தோன்றவேண்டுமாயின் மாண்புடைய மக்களும் தோன்றி யிருக்கவேண்டும்.

வால்ட் விட்மன்

427. உலகத்திலுள்ள மக்களிடையே எத்தனைவித வேற்றுமைகள் இருப்பினும அவர்கள் அனைவரையும் ஒரே குலமாக ஆக்குபவர் கவிஞரே.

வோர்ட்ஸ்வர்த்

428. கவிஞர்கள் துக்கத்தைத் துய்த்தே வளர்வர். சிறந்த கவிஞனை ஆக்க வறுமையும துன்பமுமே தேவை போலும் !

பட்லர்

429. கவிதை இயற்றும் வேதனையில் பிறக்கும இன்பத்தைக் கவிஞரே அறிவர்.

கௌப்பர்


திருமதி பிரௌணிங்

430. பெருண்மைகளைக் காதலித்து அவற்றைக் கூறுபவர் அனைவரும கவிஞரே. உண்மையில் உண்மை காதலே.

பெய்லி

431. கவிஞர்கள் அன்றாடத் தேவையினும் அதிகமான பணத்தை வெறுப்பவராவர்.

பாரி

432. கவிஞர்கள் தங்கள் கவிதையின் பெருமையைத் தாங்களும் உணரத் தக்கவாறு அதை அவர்களால் படிக்க முடிவதில்லை.

திருமதி பிரௌணிங்

433. கவிதை அனைத்தும் கற்கக் கடினமானவை. அதன் பொருளை ஒருவாறே அறிந்துகொள்ள முடியும்.

பிரௌணிங்

434. கவிதை சொல்பவன் கவிஞன் அல்லன்; கவிதை செய்பவனே கவிஞன்.

கார்லைல்

435. உள்ளத்தில் அன்பில்லாமல் ஒரு கவிஞன் உண்டாக முடியாது.

கார்லைல்

436. கவிஞன் அதிகாரத்துடன் கூறுவதற்குக் காரணம் அவன் மற்றவர்களினும் மக்கட் பண்பு மிகுதியாக உடைமையே.

கார்லைல்

437. பணிவு என்பது கவிஞர்களிடம் அருமையாகவே காணப்படும். அநேகமாக ஒவ்வொரு கவிஞனும் தானே உலகத்தில் தலைசிறந்தவன் என்று கருதிக் கொள்ளுகின்றான்.

செர்பான்டீஸ்

438. கவிஞன் களிநடம் புரியட்டும், அவன் மூலமாகவே மக்கள் அனைவரும் காண்பவராவர்.

சானிங்

439. பொருள் பறவை, செய்யுள் கூண்டில். கவிஞன் இரண்டையும் தன் உள்ளத்தில் சுழற்றி எப்படியோ நம்முடைய உள்ளத்தில் பறக்கவிட்டு விடுகிறான்.

டாப்ஸன்

440. பிற்காலத்தில் பெரிய கவிஞனாயினும் ஆரம்பத்தில் அவனுடைய கவிதையில் ஆன்றோர் சாயல் காணவே செய்யும்.

ஹாவ்லக எல்லிஸ்

441. கவிஞர்கள் பயிற்சிக் கவிஞர், இயற்கைக் கவிஞர் என இருவகையினர். முன்னவரை வணங்குவோம், பின்னவரைக் காதலிப்போம்.

எமர்ஸன்

442. பெரிய கவிஞனே ஒரு நாட்டின் விலைமதிக்க வொண்ணா மாணிக்கமாவான்.

பீட்ஹோவன்

443. தன்னை மிக உயர்ந்தவனாக எண்ணிக்கொள்ளாத கவிஞனை நான் ஒரு நாளும் பார்த்ததில்லை.

ஸிஸரோ

444. சோகம் நிரம்பிய கருத்தைக் கூறும் பாடல்களே இனிமை நிரம்பியவை.

ஷெல்லி

445. எல்லா மக்களும் இருதயத்தில் கவிதை உடையவரே.

எமர்ஸன்

446. இக்காலத்துக் கவிஞர்கள் தங்கள் மசியுடன் நீரை அதிகமாகக் கலக்கிறார்கள்.

கதே

447. அந்த மனிதன் ஸத்தியமாயிருக்க வேண்டும், அல்லது கவிதை இயற்றிக்கொண்டிருக்க வேண்டும்.

ஹொரேஸ்

448. பெரிய கவிஞன் ஆவதற்கு அடுத்த படியிலுள்ளது பெரிய கவிஞனை உணரும் ஆற்றலாகும்.

லாங்பெல்லோ



கோல்ரிட்ஜ்

4 9. எந்த நாட்டுப் பெரிய கவிஞனிடமும காணப்படும் தலை சிறந்த பணபுகள் அந்த நாட்டின வல்ல, எல்லா நாட்டினவாகும்.

லாங்பெல்லோ

450. காதல் செய்பவன் ஒவ்வொருவனும் கவிஞனே.

பிளேட்டோ

451. கவிஞனுக்குப் பொய் சொல்ல உரிமையுண்டு.

பிளினி

452. அறபோதனைகளை விடப் பாடலே நினைவில் தங்கும்.

கைல்ஸ்

453. ஆழ்ந்த தத்துவ சாஸ்திரியாயில்லாதவன் எவனும இதுவரை பெரிய கவிஞன் ஆனதில்லை.

கோல்ரிட்ஜ்

# 13 வசனம்

454. ஒழுங்கு, துல்லியம், நேர்மை இம்மூன்றுமே வசன நடைக்கு உரைகல்லாகும்.

வால்ட்டர் பேட்டர்


ஜாாஜ எலியட

455. கவிஞன் வசனம எழுதித் தனககுக கேடு சூழகினறுன. பந்தயக குதிரை பாரவண்டி இழுத்தலாகாது.

ஷென்ஸ்டன்

456. வசனம எனபது கவிதைககு எதிர்ப்பதமனறு, விஞ்ஞானத்துக்கே எதிர்ப்பதம.

கோல்ரிட்ஜ்

457. வசனம் என்பது சொற்களைச் சிறந்த முறையில் அமைப்பது; கவிதை என்பது சிறந்த சொற்களைச் சிறந்த முறையில் அமைப்பது.

கோலரிட்ஜ்

458. ஏன் கவிதை எழுதுகிறீர்? ஏன் வசனம எழுதுவதில்லை? வசனம எழுதுவதே மிகக கடினமானது.

வால்ட்டர் பேட்டர்

459. கவிதை எழுதுவதில் விட வசனம் எழுதுவதற்கே சொல்வளம் மிகுதியாக வேண்டும்.

ஜார்ஜ் மூர்

# 14 கதை

460. எந்தக் கதையும எக்காலத்தும் ஒன்றுபோல் இருப்பதில்லை. அப்படிக் கூறுவதினும் அதைப் படிககும நாம எககாலத்தும ஒன்றுபோல் இருப்பதில்லை என்று கூறுவதே பொருத்த முடைத்து.

ஜார்ஜ் எலியட்

461. கதையைத் தெளிவாக வாயால் கூறுவதே எளிதன்று, எழுத்தால் எழுதுவதோ மிகக் கடினம். திறமையைக் காட்ட விரும்புவோர் தெளிவாகக் கூறமுடியாது.

ஜார்ஜ் பாரோ

462. அலங்காரமின்றிக் கூறும் கதையே அதிக வெற்றி காண்பதாகும்.

ஷேக்ஸ்பியர்

463. குழந்தைகளை விளையாட்டைவிட்டு வரும்படியும் கிழவர்களை ஓய்வை விடுத்து வரும்படியும் செய்யும் கதைகளே தேவை.

பிலிப் ஸிட்னி

464. கதை கதையாகவே இருக்க வேண்டும், அறிவு நூலாக இருத்தலாகாது.

பிலிப் ஸிட்னி

465. கதை இன்பம் தரவேண்டுமாயின் உண்மையாயும் பொருத்தமாயுமிருத்தல் வேண்டும். சுருக்கமாகவும் தெளிவாகவும் சுவைபடவும் கூறப்படல் வேண்டும். இவ்வம்சங்கள் இல்லையாயின் அறிவுடையோர் உறங்கிவிடுவர். அறிவில்லாதவரே மெச்சுவர்.

ஸ்டில்லிங் பிளீட்

466. மனிதப்பண்புடைய கதைகள் இரண்டு மூன்று தான் உண்டு. அவை முன்னுல் நடக்காதவை போல் அவற்றையே திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டிருக்கிருர்கள்.

வில்லா காதர்

467. உலகத்தில் சொல்வதற்கு ஒரு கதைதான் உண்டு, அது மிகப் பழையது, சொல்வதற்கு மிக எளிது. "பேபிலோனில் ஒரு இளைஞன் இருந்தான், அவன் ஓர் இளமங்கையை அதிகமாகக் காதலித்தான்" என்பதே அந்தக் கதை.

டான் மார்குவிஸ்

468. நல்ல கதையானுல் இரண்டாம் முறை கூறுவதால் சுவை குன்றிவிடாது.

பழமொழி

469. நல்ல கதையாயினும் சொல்லத் தெரியாமல் சொன்னுல் சுவையில்லாததே.

பழமொழி

# 15 நாவல்

470. நாவல்கள் இனிப்புப் பலகாரங்கள். இலக்கியச் சுவை இயல்பாக உடையவரே அவற்ருல் நலம்பெறுவர்.

தாக்கரே

471. அற்புதக் காதல்கூறும் கதைகளை அணுகற்க. இல்லாத அழுகையும் இன்பத்தையும் பற்றியே அவை கூறும், உலகத்தை உள்ள வாறு உரையா.

கோல்ட்ஸ்மித்



ஷோப்பனர்

472. நாவல் படிப்பதில் வழக்க மாக ஆழ்ந்து விட்டால் நாளடைவில் தீமையே தரும்.

ஷோப்பனர்

473. அற்புதக் காதல் ஓரளவு வேண்டியதே. அது மனிதப் பண்பை உயர்த்தும். இல்லையெனில் மனிதப் பண்பு மண்ணில் புரளும்.

ஸ்விப்ட்

474. அறிவு நூல்களும் வேண்டும், ஆனந்த நூல் களும் வேண்டும் மனிதனுடைய மனத்துக்கு இரண்டும் தேவை. ஆலிவ் மரத்தைப் போலவே ரோஜா மலரும் வேண்டியதே.

பால்ஜக்

475. நல்ல நாவல் வாழ்க்கையைச் சித்திரித்துக் காட்டும். அறிவோடு படித்தால் அகத்திலிருந்து கொண்டே உலக வாழ்வின் அம்சங்களையெல்லாம் அறிந்து விடலாம்.

புல்வெர்



செஸ்டர்டன்

476. நாகரிகத்தை வளர்ப்பதற்காக மனிதன் கண்ட சிறந்த சாதனங்களுள் ஒன்று நல்ல நாவல் என்பேன்.

ஹெர்ஷல்

477. உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கதை வாயிலாகப் பெறும அறிவே உள்ளத்தைப் பண்படுத்த வல்லது. நம்முடைய உள்ளம் சூடேற்றியே தட்டக்கூடிய இரும்பு போன்ற ஒரு பொருளோ? அன்றி பொய் சொல்லி ஏமாற்றியே மெய்யை ஏற்கச் செய்ய வேண்டுமோ?

ஸ்டேர்ன்

478. மருந்தை வெல்லத்தில் பொதிகிறோம், அது போல் உண்மையையும் அறத்தையும் புனைந்துசொன்னால் என்ன?

சாம்பர்ட்

479. மனிதன் கவிதையுணர்ச்சியுடையவன், அதனால் தான நாவலில் இன்பம காண்கின்றான்.

ஹாஜ்லிட்

480. நாவலும் இலக்கியமும் வேறு வேறானவை; இலக்கியம ஆடமபரப்பொருள, நாவல் அவசியப் பொருள்.

செஸ்டர்டன்

481. நடந்த வரலாற்றைவிட நடவாத நாவல் அதிகமாக அறிவைப் புகட்டும்.

பாஸடர்

482. மக்கள் வாழ்க்கையைப் பண்படுத்தும் நூல்களுள் மிகச் சிறந்தவை நாவல்கள். நம்மைத் தின்று கொண்டிருக்கும் நம் ஆணவத்தைத் அறவே பிரித்து நீக்கி அறிய வேண்டியவைகளைக் கற்பிக்கும்.

ஸ்டீவன்ஸன்

483. மனித இயல்பை அறிந்து ஆநந்திப்பவர் மாண்புடைய நாவல்களைப் பயில்வார்களாக.

வாட்லி

484. நாவலாசிரியர் தொழில் பெரிய நிகழ்ச்சிகளை விவரிப்பதன்று, சிறிய நிகழ்ச்சிகளைச் சுவையுடையன வாகச் செய்வதே.

ஷோப்பனர்

485. நாவலாசிரியன் செய்ய விரும்புவது தன்னுடைய எழுத்தின் மூலமாக நம்மைக் கேட்கும்படியும் உணரும்படியும்—எல்லாவற்றிலும் மேலாகக் காணும்படியும் செய்வதே. அதைத் தவிர வேறொன்றுமில்லை.

கான்ராட்

486. குழந்தைகளுக்குப் படம் போட்டுக் கற்பிப்பது போல் நாவல் உண்மைகளை விளக்கிக் காட்டும்.

வில்மாட

487 நாவல் என்பது நிகழ்கால வரலாறாகும். நாம் வாழும் காலத்தின் சமுதாய வாழ்க்கையை சித்திரிப்பதாகும்

ஜார்ஜ் மூர்.

488. நகைக்கச் செய்க; அழச் செய்க; காத்திருக்கச் செய்க. இதுவே நாவலாசிரியர்க்குச் சொல்லும் யோசனை.

சார்ல்ஸ் ரீட்

489. நாவல்கள் இனிய பண்டங்கள், ஒழுங்கான இலக்கியச் சுவையுடையோர் அனைவரும் விரும்புபவை.

தாக்கரே

490. நாவல் என்பது, மனிதனுடைய மனோ சக்திகளின் சிகரம், மனித இயல்பைப்பற்றிய முழு அறிவு, மக்களைப் பற்றிய சிறந்த வருணனை, சிறந்த நாடகச் சுவை ஆகியவைகளைப் பொறுக்கி எடுத்த சொற்களில் கூறும் நூலாகும்.

ஜேன் ஆஸ்டன்

491. சாதாரண மக்களுடைய தொடக்கம் மிருக்க் கதைகள், இறுதி நாவல்கள்.

ஜூபெர்ட்

492. பெரும்பாலான நாவல்கள் கலைச் செல்வங்களாக இல்லை. ஆராயும் மனப்பான்மை அதிகமாகக் காணப்படுகின்றது.

ஸ்டீவென்ஸன்

493. நாவலாசிரியர் வேலை பெரிய நிகழ்ச்சிகளை விவரிப்பதன்று, சிறியவற்றைச் சுவைபடக் கூறுவதேயாம்.

ஷோபனர்

494. நாவலாசிரியரின் தொழில் பெண்களின் இனிய குணங்களையும் அன்புசெய்யும் தன்மையையும் வர்ணிப்பதேயாகும்.

ஆந்தோனி டுரோலோப்



ஹெர்ஷல்

495. நான் செய்ய விரும்புவது எழுத்து மூலம் உங்களை கேட்கவும் உணரவும் பார்க்கவும் செய்வதே, ஆம், அதுதான், வேறொன்றுமன்று.

கான்ராடு

496. மனிதன் எனப்படுபவன் கவிதை யுணர்ச்சியுடையவன், நாவல் படிப்பதில் விருப்பமுடையவன்.

ஹாஜ்லிட்

497. நடந்த வரலாற்றினும் நாவலே மிகுந்த பயன் தருவது என்பது என்னுடைய நம்பிக்கை.

பாஸ்டர்

498. சிறந்த நாவலை நாகரிகத்தை வளர்ப்பதற்காக வகுக்கப்பட்ட ஆற்றலுடைய சாதனங்களுள் ஒன்றாகக் கருதுகின்றேன்.

ஹெர்ஷல்


ஜெபர்ஸன்

499. உயர்ந்த செல்வாக் குடையனவாயும உண்மையான பயன் தருவனவாயுமுள்ள நூல்கள நாவல்களே.

ஸ்டீவன்ஸன்

500. நாவல்கள் பிறர் வாழ்க்கையைத் திறந்து காட்டி மனித வாழ்க்கையின போதனைகளைக் கற்பிக்கின்றன.

ஸ்டீவன்ஸன்

501. நம்மைத் தின்னும் ஆணவம் என்னும் அரக்கனை ஒழிப்பது நாவலே.

ஸ்டீவன்ஸன்

502. நாவலாசிரியர் சிறந்தவராளுல் அவருடைய நாவல் வாழ்க்கையை வரலாறு சித்திரிப்பதினும உண்மையாகச் சித்திரிக்கும். சிறந்தவரில்லையாளுல் வாழக்கையைப்பற்றித் தவருன கருத்தே உண்டாக்கும்.

எட்வார்ட்ஸ்

503. மனிதனுடைய மனத்தின் தன்மையை ஆய்ந்தால் நாவல்கள் மகிழ்ச்சி தருவது போலவே பயனும அளிப்பன வாகும.

ஜெபர்ஸன்

504. வாழ்க்கைக்கு முரணான காதற் கதைகளைத் தொடலாகாது, அவை உலகில் இல்லாத அழகையும் இன்பத்தையும் நாடி அலையச் செய்யும். என் சொல்லை நம்புங்கள், அந்த நூல்கள் வாழ்க்கையைப்பற்றி எவ்வித அறிவும் தருவதில்லை.

கோல்ட்ஸ்மித்

505. அறிவு நூல்களைப் போலவே பொழுதுபோக்கு நூல்களும் தேவை, அறிவு நூல்கள் பயன் தரும், நாவல்கள் இன்பமளிக்கும்.

பால்ஜக்

506. நல்ல நாவல்களை அறிவோடு படிப்பவன் இருந்த இடத்திலிருந்தே உலக அனுபவங்கள் அனைத்தையும் அறிந்துவிட இயலும்.

புல்வெர்

507. நாவல் என்பது வெறும் பொழுதுபோக்குச் சாதனமன்று. மேதைகள் அதை மாண்புமிக்க இலக்கியமாகச் செய்துவிட்டனர்.

சானிங்

508. நல்ல உபதேசங்கள் நம்முடைய இருதயத்திடம் பதிவது நம்முடைய மனத்தைக் கவரும் நல்ல கதைகள் மூலமே.

ஸ்டேர்ன்

509. நல்ல நாவல்கள் மனித இயல்பை விளக்கும் அறிவைப் பெருக்கும், அனைபைக்கிளறும்.

டக்கர்மென்

510. கசப்பான மருந்தை கட்டியில் பொதி கிறோம். அதுபோல அறவிஷயங்களுக்கு இனபமான கதை எனும உடையுடுத்திஞல் எனன?

சாம்பர்ட்

511. உண்மையான நாவல் உலகத்தில் நிகழ்வதை விட உயர்ந்த நோககமுடையதாகும.

பெய்லி

512. மனித இயல்புகளை அறிய விருமபுவோர் சிறந்த நாவல்களைப் படித்தால் மனித இயல்பைப்பறறிய அறிவும பெறுவர், அவ்வறிவை வாழக்கையில் பயனபடுத்தும முறையையும் அறிவர்.

வாட்லி

513. நாவல் படிக்க நேரம் கிடைக்குமாஞல் துக்கப் பட நேரம கிடையாது போகும.

ஜான்ஸன்

514. நாவலாசிரியர் எவர் மனத்தையும் புண்படுத் தாமலும எவர்கரும தாம் தாழ்ந்து போகாமலும் உண்மையை உரைக்க முடியும்.

எலியனுர் ரூஸ்வெல்ட்

515. நாவல்களே மிகுந்த செல்வாக்குடைய நூல்கள்; அந்தச் செல்வாக்கும உண்மையை உரைப்பதால் பெறுவதே யாகும்.

ஸ்டீவென்ஸன

516. உண்மையாக உள்ள மக்கள் ஒரு காலத்தும வாழ்ந்திராதவர்களே.

ஆஸ்கார் ஓயில்ட்

# 16. வாழ்க்கை வரலாறு



லாங்பெல்லோ

517. மக்களின தலை சிறந்த ஆசிரியர்கள் சான்றோர் சரிதை யாகும்.

பௌலர்

518. வாழக்கையில் ஒரு சுவை யான நிகழ்ச்சி போதும வாழ்கக்கை முழுவதையும அறிவதற்கு.

சானிங்

519. சான்றோர் தவறுகளைக் கூறுவதில்லை, அதனால் வாழக்கை வரலாற்றைப்போல் பொய்யான இலக்கியம் கிடையாது.

சானிங்

520. பண்டைப் பெரியோர் சரிதைகள் தெரியா திருப்பது வாழ்நாள் முழுவதும குழந்தைப்பருவத்திலேயே இருப்பதாகும்.

புளுட்டார்க்

521. எழுதத் தக்க வாழ்க்கை வரலாறு உண்மை யாகவும் விபரமாகவும் எழுதத் தககதாகும.

லாங்பெல்லோ

522. தம் முயற்சியாலேயே சான்றோரானவர் வாழ்க்கை வரலாறு படிப்போரிடத்திலும் சால்பை உண் டாககும்

மான்


ஜான்ஸன்

523. எல்லா நூல்களினும் இன்பமும் பயனும் மிகுந்தது வாழ்க்கை வரலாறே.

லாண்டார்

524. வாழ்க்கை வரலாறுகளில் சில அறநூல்களுக்கு இணையானவை.

ஸ்மைல்ஸ்

525. பெரியோருடன் வாழ்ந்தவரே வாழ்க்கை வரலாறு எழுதத் தகுந்தவர். ஆனால் அவர்களுள் சிலரே எழுதத் தகுந்ததை அறிவர்.

ஜான்ஸன்

526. எவர் வாழ்க்கையையும் உள்ளது உள்ளபடி அறிவோடு எழுதினால் பயன் தருவதே.

ஜான்ஸன்

527. வாழ்க்கை வரலாறு என்பது ஒருவர் பேசியதைக் கூறுவதாயிருக்கவேண்டுமே யன்றிச் செய்ததைக் கூறுவதாயிருத்தலாகாது.

கிளவலண்டு

528. நல்லவிதமாக வாழ்ந்த வாழ்க்கை அருமையானதுபோலவே நல்லவிதமாக வரைந்த வாழ்க்கை வரலாறும் அருமையானதாகும்.

கார்லைல்

529. வாழ்க்கை வரலாறு என்பது ஒருவனுடைய சம்பாஷணைகளைக் கூறுவதேயன்றி ஒருவனுடைய செயல்களைக் கூறுவதன்று.

ஜார்ஜ் மூர்

530. வரலாறு எந்தக் காலத்திலும் உண்மையாயிருந்ததில்லை. வாழ்க்கை வரலாறு உண்மையாயில்லாவிடினும் உண்மைபோலவே சுவையுடையதும் நன்மை பயப்பதுமாகும்.

லாண்டார்

531. சான்றோருடைய வாழ்க்கை வரலாறுகள் அவர்களைப்போல் நாமும் ஆகலாம் என்று நினைவூட்டுகின்றன.

லாங்பெல்லோ

532. உலகத்தின் வரலாறு என்பதெல்லாம் பெரியோர்களுடைய வாழ்க்கை வரலாறேயாகும்.

கார்லைல்

533. வரலாற்றைப் படிக்கவேண்டாம், வாழ்க்கை வரலாற்றைப் படியுங்கள், அதுவே வாழ்க்கைக்கு வழிகாட்டும்.

டிஸ்ரேலி

534. வரலாறு என்று ஒன்றில்லை. வரலாறு என்பதெல்லாம் வாழ்க்கை வரலாறு ஒன்றே.

எமர்ஸன்

535. நல்லோர் சரிதையைக் கற்பது நல்லோராக நடக்கத் தூண்டும். சான்றோர் சரிதை அன்பு பிறக்கச் செய்யும்.

செனீக்கா

536. வாழ்க்கை வரலாறு நன்றாக எழுதாவிட்டாலும் பாதகமில்லை. உண்மையை உரைப்பதாகமட்டும் இருந்தால் போதும்.

சீங்கிவிஜ்

# 17 சுயவாழ்க்கை வரலாறு

537. தவறுகள் செய்ததைக் கூறுவது கூறுவோருக்கு வருத்தம் தரும். புகழக் கூடியதைக் கூறுவது கேட்போர்க்கு வருத்தம் தரும்.

கிரெளலி

538. தீயவற்றை மறைக்கவில்லை, நல்லவற்றைச் சேர்க்கவில்லை என்று இறைவனிடம் தைரியமாகக் கூறுவேண்.

ரூஸோ

539. பிறர் எவ்விதம் வாழ்ந்தார்? எவ்வாறு வாழ்ந்ததாக நாம் எண்ண வேண்டும் என்று பிறர் விரும்புகின்றனர்?—இந்த இரண்டையும் சுயசரிதையில் அறியலாம்.

கோல்டன்

540 என் நற்குணங்களைச் சொல்வது ஆணவமாகும், என தீய குணங்களைச் சொல்வது அறிவீனமாகும்.

ஹீன்



ஹீன

541. சுயவாழ்க்கை வரலாறு கஷ்டமான காரியம், தன்னைப்பற்றி இழிவான விஷயங்களை எழுதுவது தன்னுடைய மனத்திற்குத் துன்பம் தரும். புகழான விஷயங்களை எழுதுவது கேட்போர் காதுக்குத் துன்பம் தரும்.

க்ரௌலி

542. இது என் சுய சரிதம், இதுதான் நான், இதில் எந்த இழிவான விஷயத்தையும் மறைக்கவில்லை. எந்த நல்ல விஷயத்தையும் சேர்த்துவிடவுமில்லை.

ரூஸோ

543. சுயசரிதம் படிப்பது இரண்டு காரணங்கட்காக· உண்மையாகவே ஒருவன் எவ்விதமிருந்தான் என்று காணவும், பிறர் எவ்விதம் எண்ணிக் கொள்ளவேண்டும் என்று அவன் விரும்புகிறான் என்று காணவுமாகும்.

கோல்ட்டன்

544. அழியாப்புகழ் பெறும் வழி ஒன்றுண்டு, "என் இதயத்தைத் திறந்து காட்டுகிறேன்" என்ற பெயருடைய ஒரு சிறு நூல் எழுதினால் போதும். ஆனால் அந்த நூல் அதனபெயருக்கு ஏற்றதாயிருத்தல் அவசியம்.

எட்கார் ஆலன் போ


பைரன்

545. தன்னைப்பற்றி விமர்சனம எழுதுவது சங்கடமான காரியம். சாத்தியமில்லை என்று கூட கூற லாம. என்னிடமுள்ள நல்லவைகளை எடுத்துககூற நான் வான்கோழி யல்ல, என்னிடமுள்ள தவறுகளை எடுத்துகூற நான முட்டாளுமல்ல.

ஹீன்

# 18 பழமொழிகள்

546. மூதறிஞர் கண்டவைகளை வெறுக்காதே அவர்களுடைய பழமொழிகள் அறிவு தரும்.

டைரன்

547. பழமொழியைத் தக்க சமயத்தில் பயில்வது பயனதருவதே, ஆயினும் சமயம் அறியாது கூறினல் சம பாஷனை சுவையற்றுவிடும்.

செர்வான்டீஸ்

548. பழமொழிகள் எனபவை பாமர மக்களின சித் தாந்தம என்று கூறத்தகும்.

ஹோவெல்

549. பழமொழி என்பது பரந்த பொருளைச் சுருங்கிய சொலலில கூறுவதாகும்.

புல்லர்

550. எடுத்ததற கெல்லாம் பழமொழி கூறினல் இழிவாககக கருதப்படுவாய,

புல்லர்

551. பழமொழிகளை எனபவை படியாதவனுடைய சொலலணி பொருளணிகளாகும.

செஸ்டர்பீல்டு

552 பழமொழிகளை என்பவை பெரியோர்கள் மனத்தில் சிந்தியாமல் தோன்றிய சிறந்த கருத்துக்கள்.

எமர்ஸன்

553. பழமொழிகளை என்பவை ஆன்றோர் அனுபவமாகிய நாணயமாகும.

லவல்

554. பழமொழி ஒருவன் கருத்து, எல்லோருக்கும் அறிவு ஊறறு.

ஜான் ரஸல் பிரபு

555. பழமொழிகள் பல்லாயிர ஆண்டுகளில் சேகரித்த அறிவாகும்.

ஹோ

556. உணவுக்கு உப்பு எப்படியோ. அப்படி சம்பாஷணைக்குப் பழமொழி.

அராபிய பழமொழி

557. பழமொழிகள இருட்டில் வழிகாட்டும் தீவர்த்திகள.

பாஸ்னிய பழமொழி

558. நாட்டின பழமொழிகளை வைத்து அதை மதிப்பிடுக.

ஜெர்மன் பழமொழி

559. பழமொழிகளை மட்டும அறிபவன ஒரு கண மட்டும, அதுவும பின்புறத்தில் உள்ளவன.

கோலரிட்ஜ்

560. பழமொழிகள் எனபவை மன்பதையின நல்லறிவின் தேறலாகும.

மாக்கின்டோஷ்

561. நல்ல பழமொழி ஒருநாளும பயன நல்காதிராது.

போன்

562. மனிதனுடைய அறிவில் பெரும்பகுதி பழமொழிகளே. சானரோா ஒவவொருவரும ஒரு பழமொழியே.

கோல்ரிட்ஜ்

563. பழமொழியின சிறப்பு அரிய விஷயத்தைக் கூறுவதனறு. அறிந்த விஷயததைச் செறிந்த சொறகளில கூறுவதாகும.

ஜாண்ஸன்

564. சான்றோர் கூறும் பழமொழிகள் தங்கத்தூள்போல் சிறப்புடையதாகும்.

டிலட்ஸன்



கீட்ஸ்

565. பழமொழிகள் மணலில் காணும் வித்துக்கள், கனியில் காணும் தங்கம்.

எராஸ்மஸ்

566. உண்மையே என்று அநுபவத்தில் காணாத வரை எந்தப் பழமொழியும் நமக்குப் பயன் தராது,

கீட்ஸ்

567. பழமொழிகள் என்பவை எளிதில் கொண்டு போகக்கூடிய அறிவு. சிறந்த கருத்துக்களையும் உணர்ச்சிகளையும் வடித்தெடுத்த தெளிவு.

ஆல்கர்

568 வாழ்க்கை விதிகளை எல்லாம் மனத்தில் பதித்து வழிகாட்டுமாறு சுருக்கிக் கூறுபவன் மக்கள் குலத்தின் வள்ளலாவான்.

ஜான்ஸன்

569. பழமொழிகளைப் போல் வேறு எதுவும் நினைவில் பதிவதும், நீண்டநாள் தங்குவதுமில்லை.

மர்ரே


கார்லைல்

570. பழமொழிகள் அணியாகவும் ஆனந்தமாகவுமட்டும பயனபடுவதில்லை. அவை வாழ்க்கையின் சிக்கல்களை அறுத்து வழிகாட்டவும் செய்யும்.

பேக்கன்

571. இந்த அபூர்வமான மொழிகளில் மறைந்து கிடக்கின்றன அறநூல் விஷயங்கள்.

புளுட்டார்க்

572. அனுபவமே சகல விஞ்ஞானங்களுக்கும் தாய் அவள் வயிற்றில் பிறந்தவையே பழமொழிகள.

செர்வான்டீஸ்

573. அறிவுடையோர் பல்பொருளைச் சில சொற்களில் கூறுவர்.

சிம்மன்ஸ்

574. சிறந்த பொருளைச் சுருங்கிய முறையில் சிந்தையில் தைக்கும வண்ணம கூறுவதே பழமொழியின் லட்சணம்.

கார்லைல்

575. ஆயிரம நூல்களைக் கற்பதினும் அறிஞர் கூறும் பழமொழிகளே அதிகமான அறிவைத் தரும்.

லவாட்டர்

576. நூல்கள் உண்டாகுமுன் மக்களுக்கு வாழ்க்கை முறை கற்பித்தவை பழமொழிகளே.

டிஸ்ரேலி

577. பழமொழி என்பது நீண்டகால அநுபவத்தால் பெற்ற அறிவு. எளிதில் நினைவுக்கு வரும், எப்பொழுதும் பயனபடுத்தத் தயாராயிருக்கும்.

மங்கர்

578. பழமொழிகளை அறிவின் சுருக்கம் என்று கூறலாம்.

ஜூபெர்ட்

579. ஆயிரம் சொற்களில் கூறுவதை பழமொழி ஐந்தாறு சொறகளில் அடக்கிவிடும், அதனாலேயே அது ஆற்றல் மிக்கதாகும்.

மார்ச்

580. எல்லா வகையிலும் உண்மையான பழமொழிகள் அரியனவே.

வாவனார்கூஸ்

581. பழமொழி தங்க நாணயத்தை ஒக்கும். அதைப் போலவே சிறிய அளவில் பெருமதிப்புடையது, எல்லா மக்களிடமும் செலாவணி ஆவது

மார்ச்

582. ஆன்றோர் மொழிகளை அலட்சியம் செயயாதே, அவைகள் ஆனற அறிவு தரும்.

விவிலியம்

583. பழமொழிகள் கற்பது சொற்பொழிவை அழகு படுத்துவதற்காக அன்று.

பேக்கன்

584. உண்மையாக இல்லாத பழமொழி ஒன்று கூடக் கிடையாது

ஸெர்வான்டீஸ்

585. பழமொழி என்பது நீண்டகால அனுபவத்தைச் சில மொழிகளில் கூறுவதாகும்.

ஸெர்வான்டீஸ்

586. மக்கள் குரலே கடவுள் குரல் என்பர். பழமொழிகள் என்பவை மக்கள் குரல்தானே.

ஜேம்ஸ் ஹவல்

587. பழமொழியைச் சில சொற்களில் சொல்லும் பொழுது ஆழம் குறைவது இயற்கையே.

ஜான்ஸன்

588. பழமொழி என்பது மக்கள் அனுபவத்தின் சாரமே யாகும்.

மாக்கின்டோஷ்

589. பழமொழி என்பது அறிவை வார்ப்பில் வடித்ததாகும்.

பக்ஸ்டன்.

590. பழமொழிகளை மட்டும் அறிந்தவன் ஒரு கண்ணை உடையவன், அந்தக் கண்ணும் தலையின் பின் புறம உடையவன்.

கோல்ரிட்ஜ்



எமர்ஸன்

591. நூல்கள் எனபவை சிந்தனையின் தேனகூடு. பழமொழிகள் அவற்றிலுள்ள தேன்.

ஜேம்ஸ் எல்லிஸ்

592. பழமொழிகள் அதிக அறிவு பெறுவதற்கான சுருக்க வழியாகும்.

தாமஸ ஹூட்

593. பழமொழியின் சிறப்பு அரிய விஷயத்தைக் கூறுவதனறு, தெரிந்த உண்மையைச் சில சொற்களில் கூறுவதாகும்.

ஜான்ஸன்

# 19 மேற்கோள்

594. பொருத்தமான மேறகோளை கூறுவது சொந்தமாகக் கருத்துரைப்பதுபோல் நல்லதே.

பழமொழி

595. மேறகோள் கூறுவதே அதன ஆசிரியர்களுக்குச் செய்யும தலைசிறந்த மரியாதையாகும.

ஜான்ஸன்


கோல்ரிட்ஜ

596. மேற்கோள் கூறும்போது எல்லோரும் படிக்கும் புத்தகங்களிலிருந்தே கூறுக.

செல்டன்

597. நல்ல கருத்து ஒன்றை வெளியிட்டவனுக்கு அடுத்தபடியிலுள்ளவன் அந்தக் கருத்தை மேற்கோளாகப் பயன்படுத்துபவன்

எமர்ஸன்

598. பழைய வாக்கியங்களிலிருந்து நல்லவற்றைப் பொறுக்குவது என்பது புதிய வாக்கியங்கள் உண்டாக்குவதற்கு இணையாகவே ஆகும்.

குருப்லெட்

599. எல்லோரும் எல்லாச் சிறந்த நூல்களையும் படிக்க இயலாது, ஏதேனும் சிறந்த கருத்தைக் கண்டால் எல்லோர்க்கும் அதைச் சொல்லுக.

கோல்ரிட்ஜ்

600. மேற்கோளின் சுவை அதன் வாக்கியச் சிறப்பையே பொருத்ததாகும்.

ஸென்

601. எனக்குத் தெரியாத சிறந்த கருத்தை எனக்குப் பொறுக்கிக் கொண்டுவந்து தருபவன் தனையறிஞனாக்கிக்கொள்ளாமல் என்னைச் செல்வனாக்குகின்றான்.

போவி

602. மேற்கோளைப் பொருத்தமாகப் பயன்படுத்தக் கூடியவன அதை உண்டாககியவனிடம உள்ளதுபோன்ற திறமையுடையவனே.

ஆல்கோ

603. பெரியோர்கள், மேற்கோள போதுமாயிருககும போது தாமாக உண்டாகக முயல்வதிலலை ஆயினும அவாகள மேறகோள கூறும முறையானது அது அவர் களுடையதே என்று நம்புமாறு செயதுவிடும.

எமர்ஸன்

604. பொருத்தமான மேறகோளைக கூறககூடியவன தன்னுடைய கருத்தை ஏற்குமாறு எளிதில் செயது விடுவான்.

டிஸ்ரேலி

605 சென்ற கால இலக்கியத்தைச சுட்டிக காட்டு பவன் தற்கால இலக்கியத்தை முன்னேறச் செய்பவ னாவான்.

ஜான்ஸன்

606. சிறந்த பகுதிகளைத் தொகுத்துத் தருபவன சிறந்தொரு தொண்டு செய்பவனே.

கதே

607. ஒரு கருத்தை உண்டாககிய திறமை அதை உபயோகிப்பவனுக்கு முண்டு.

பேயில்

608. கருத்துக்கள் உண்டாக்கியவர்க்கு உரியன ஆவதைவிட அவற்றை உபயோகிப்பவர்க்கே அதிக உரிமை யுடையனவாகும்.

வாவனார்கூஸ்

609. மேற்கோளைத் தக்க வண்ணம் பயன்படுத்துவது ஒரு சிறந்த கலையே.

டிஸ்ரேலி

610. காவியத்தின் அழகு சிலவேளைகளில் அதிலிருந்து கூறும் மேற்கோளிலேயே அதிகஒளியுடன் பிரகாசிக்கும்.

எமர்ஸன்

611. நல்ல கருத்து என்பது கடவுள் தரும் வரப்பிரசாதமாகும். அதற்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்துவோம். அடுத்தபடி நன்றிசெலுத்துவது அதை முதலில் கூறுபவருக்கு. அதற்கும் அடுத்தபடி அதை எடுத்துக் காட்டுபவருக்குக் கூறுவோம்.

போவி

612. சான்றோர் அறிவும் அனுபவமும் மேற்கோள்களாலேயே சாகாமல் நிற்கின்றன.

டிஸ்ரேலி

613. பொருத்தமாக மேற்கோள் கூறுவதற்குச் சிறந்த சுவையறிவு தேவை.

போவி

614. மேறகோள் காட்டுவது என்பது மனிதனுககு இனறி யமையாத தாகும. அதுவே அவ னுக்கு ஆனந்த மளிப்பதாகும.

எமர்ஸன்

615. நம்முடைய தலைசிறந்த கருத்துக்களை பிறரிடமிருந்தே பெறு கினறோம.

எமர்ஸன்



பெஞ்சமின் பிராங்க்ளின்

616. மேறகோள் ஒவ்வொன்றும மொழியின் வளர்ச்சிக்கு உதவுவதே யாகும.

ஜான்ஸன்

617. தம்முடைய நூலிலிருந்து பிற ஆசிரியர்கள் மேற்கோள் கூறுமபோது உண்டாகும இனபத்துக்கு இணையான இனபம ஆசிரியர்க்குக் கிடையாது

பெஞ்சமின் பிராங்க்லின்

618. நல்ல விஷயங்களைத் தவறுகப் பயன்படுத்துவ துண்டு. மேறகோள எனறு கூறிக கட்டுரை முழுவதும் மேற்கோள்களாகவே ஆக்கிவிடுவர்.

டிஸ்ரேலி

619. என் நூலிலிருந்து எப்போதேனும் மேற்கோள் காட்டப் பெற்ருல் அந்தப் புகழ் போதும் எனக்கு.

அலெக்ஸாண்டர் ஸ்மித்


ஸ்விப்ட்

620. அறிவோடு படிப்பவனே பொருத்தமான மேறகோளகளைக கூற முடியும.

ஆல்காட்

621. நல்ல மேற்கோளகளைக் கையாள்வது நமககு ஆசிரியரிட முள்ள பகதியைக காட்டும. வாசிப்ப வர்ககு வரப்பிரசாதமாக இருக்கும.

லூயிகிளே

622. மேற்கோள் பிறருடையதே யாயினும தக்க விதம் பயனபடுத்திறல் பயன்படுத்துபவர்கரும சொந்தமே.

லவல்

# 20. நடை

623. "தக்க இடங்களில் தக்க சொற்கள்" என்று நடைககு இலககணம கூறலாகும.

ஸ்விப்ட்

624. தூய நடைக்குக் கட்டளை யாதெனில் பொரு ளைச் சிதையாமல் வேறுவிதமாக எழுத முடியாதிருத்தலே யாகும.

கோல்ரிட்ஜ்

625. ஆழ்ந்த கருத்துக்களை அழகு செய்வது தெளிந்த நடையாகும்.

வாவனார்கஸ்

626. நடை என்பது கருத்துக்கள் அணியும் உடையாகும்.

செஸ்டர்பீல்டு

627. விளங்காத நடை, எழுதியவர் மனத்தின் இருளைக் காட்டும்.

வில்கின்ஸ

628. நடை அழகைக் கண்டு கருத்து மிகுதி என்று மயங்குவோர் பலர்.

லாங்பெல்லோ

629. நடை என்பது எழுதியவர் மனத்தின் பிரதியாகும். தெளிவாக எழுதவேண்டுமா, உள்ளத்தில் ஒளி உண்டாக்கிக்கொள். சிறந்த நடை எழுதவேண்டுமா சிறந்தவனாக ஆக்கிக்கொள்.

கதே

630. தெளிவில்லாத நடையை ஆழமுள்ள நடையாக எண்ணாதே. ஆழமுடையது விளங்கும், தெளிவில்லாதது விளங்காது.

கிங்ஸ்லி

631 நல்ல நடை எழுதுவோர் மரபுச் சொற்களை மிகுதியாக அறிவர். அவைகளே மொழியின் உயிர் நாடியாகும்.

லாண்டார்

632. பிறர் நடைபோல் வகுத்துக்கொள்ளும் நடை அழகாயுமிராது, தெளிவாயுமிராது.

விப்பிள்

633. இன்றியமைவனவற்றை நீக்கும நடையே தூயதாகும.

நெக்கர்

634. ஆழ்ந்து சிந்திப்பவர் அதிகச் சொற்களை உபயோகிப்பதில்லை.

வாஷிங்டன் இர்விங்

635. நடை தெளிவில்லை என்பது எழுதத் திறமையில்லை எனபதையே கூறும.

குன்றிலியன்

636. எல்லா நாட்டுப் பெரியோர் நடையும ஒன்றுபோல் அழகாயும் எளிதாயும காணப்படுகின்றன. அலங்காரமான நடை அறிவீனத்தின அறிகுறியாகும.

கோல்ட்ஸ்மித்

637. தூய நடை எப்பொழுதும எளியதே, படிப்பவர் மனத்தைக் கவர்வதில்லை.

வில்மாட்

638. தெளிந்த சுனையைப்போல் தெளிந்த நடை ஆழமாயிருப்பினும ஆழமில்லாததுபோல் தோனறும. கலங்கிய நீரே ஆழமாகக காட்டும.

லாண்டார்

639. ஒவ்வொரு பெரிய எழுத்தாளருடைய நடையும் அவர்களுக்கே உரியது, அதனால் அவர் அனுமதேயமாய் எழுதமுடியாது.

வால்ட்டேர்



ஷில்லர்

640. அரசனுடைய ஆணையில் அணிகளும் அலங்காரச் சொற்களும் இல்லாவிடினும் ஆற்றலுடையதாக இருப்பதுபோல் அறிஞர் நடையும் எளிதாயினும் ஆற்றலுடையதே.

ஸவுத்

641. தெளிவின்மையும் பொருத்தமற்ற அணிகளுமே நடையைக் கெடுக்கும் வழுக்களுள் முக்கியமானவை

மக்காலே

642. நடை தெளிவில்லையானால் நம்முடைய மனத்தில் தெளிவுண்டா என்று அறியவேண்டும். நன்றாக அச்சடித்த கடுதாசியும் இருட்டில் படிக்கமுடியாதல்லவா?

கதே

643. சொல்லாமல் விட்டுவிட்டவற்றைக் கொண்டு அவரை நடையில் வல்லுநர் என்று முடிவு செய்கிறேன்.

ஷில்லர்

644. இயற்கையான நடையைக் கண்டதும் வியப்பும் களிப்பும் அடைகிறோம். காரணம் யாதெனில், நாம


அரிஸடாட்டில்

ஓர் ஆசிரியரைச் சந்திக்கப் போவதாக எண்ண அதற்கு மாறாக ஒரு மனிதரையே சந்தித்துவிட்டோம் எனபதே.

பாஸ்கல்

645. ஐயம் எழும்போது சாதாரணமான எளிய மரபுச் சொல்லையே பயன்படுத்துக. அரிதாரத்தைவிட இரத்தமே முகத்துக்கு அழகு தரும்.

ஹோர்

646. நடை என்பது ஒருவர்க்கு உரியதே, அது அவருடைய ஆன்மாவில் ஒரு பகுதியே

பூபாங்

647. தெளிவான நடை எழுதுவது எளிதுபோல் தோன்றும், அதுபோல் எழுதப் பலர் முயல்வர், ஆனால் வெற்றி பெறார்.

கோல்ட்டன்

648. ஓவியத்தைப் போலவே நடையும் உள்ளத்தினின்று எழுந்தால் மட்டுமே அமரத்துவமுடையதாகும்.

டக்கர்மன்

649. நல்ல நடை என்பது முதலாவதாகத் தெளிவாக இருக்கவேண்டும். இரண்டாவதாக, கூறும் பொருளுக்குப் பொருத்தமாகவும் இருக்கவேண்டும்.

அரிஸ்டாட்டில்

650. வாசிப்பவர்கள் விளங்கலாம் என்ற நோக்கத்துடனன்றி, விளங்கித் தீரவேண்டும் என்ற நோக்கத்துடனேயே எழுதவேண்டும்.

குவின்றிலியன்

651 நன்றாக எழுத விரும்புவோர் சாதாரண மக்கள் பேசுவதுபோல பேசவும், சான்றோர் சிந்திப்பதுபோல சிந்திக்கவும் கற்றுக்கொள்ளக் கடவர்.

அரிஸ்டாட்டில்

652. கற்பனை நிரம்பிய நூல்களுக்கு ஏற்ற சொற்களும் மரபும், எளிய சொற்களும் மரபுமே.

கோல்ரிட்ஜ்

653. நல்ல நடை எழுதத் தேவையானவை மூன்று: சிறந்த நூல்களைக் கற்க, சிறந்த நாவலர் பேசும்பொழுது கவனிக்க, அடிக்கடி எழுதிப் பழகுக.

பென்ஜான்ஸன்

654. நடையின் தலையாய பண்பு தெளிவுடைமை. விளக்கவேண்டிய அவசியத்தைப் போன்ற வழி வேறு கிடையாது

பென் ஜான்ஸன்

655. நன்றாகச் சிந்தித்தவர் நடை தெளிவாயிருக்கும். சொற்கள் எளிதில் ஒழுகும்.

பாய்லோ

656. உயர்ந்த கருத்துக்களைக் கூறுவது கடினமாயினும் எளிதாகக் கூறுவதுபோலவே கூறவேண்டும். உண்மை ஒளிர்வது எளிய நடையிலேயே.

டில்லான்

657. நடை எழுதுவதில் விலக்க வேண்டுவன இவை என என்று அறிகிறோமோ அன்றே நடைக்கு உரியராவோம்.

பௌலர்

658. உயர்ந்த செயல்களை எளிய நடையில் உரைத்து விடலாம், அற்ப விஷயங்களைக் கூறவே அணிகள் தேவை.

லாப்ரூயர்

659. ஒருவனுடைய உருவமும் முகமும் அவனுடையனவேயாமாறு ஒருவனுடைய நடையும் அவனுடையதே.

பௌலன்

660. பிறர் நடையைத் தழுவாமல் தானாக எழுதும் நடையே நல்ல நடையாகும்.

மாண்டெஸ்கியூ

661. தெளிவாக எழுதப்பட்டன வெல்லாம் நன்றாக எழுதப்பட்டனவே.

மாண்டேகு

662. ஒருவனுடைய நடை உருவாவது உற்சாகமும் கற்பனையும் மிகுந்த இளமையிலேயாகும்.

ஜெபர்ஸன்

663. சிலர் படம் பிடிக்க உட்காரும்போது திருதிரு என்று விழித்துக்கொண்டு நிமிர்வதுபோல, சிலர் எழுதப் போகும்போது இந்த விதம் எழுதவேண்டும் என்று எண்ணிக் கொண்டே எழுதிக் கெடுப்பர்.

லிச்சன்பெர்க்

664. பொருளும சுவையும் குன்ருவண்ணம அதே மொழியில் பெயர்க்கக கூடிய நடை நல்ல நடையன்று.

கோல்ரிட்ஜ்



பென் ஜாண்ஸன்

665. பேசவோ, உரக்க வாசிக்கவோ ஆற்றலில்லாத நடை நல்ல நடையன்று.

ஹாஜ்லிட்

666. வழக்கில் இல்லாத சொற்களைத் தேடற்க சொற்களை மறந்து பொருளையே கருதுக.

பென் ஜாண்ஸன்

667. சிறந்த நடை எழுத விருமபினல் கவனிக்க வேண்டியவை இரண்டு: கருத்து படிப்படியாக வளர்ந்து வரவேண்டும, வாக்கியங்கள ஒன்ருெடொன்று இணைந்து செல்லவேண்டும.

டிக்குன்ஸி

668. நல்ல நடை எழுதுவதற்கான முதல் விதி-தலையாய விதி :—பயன படுத்தும சொறகள படிப்போர் அனைவர்க்கும விளஙகுவனவாக இருத்தல் வேண்டும. அழகும தூய்மையும இதற்கு அடங்கியவே.

மக்காலே

669 வழக்கிலுள்ள சொற்களே மனத்தில் பதிகின்றன. இச் சொறகளை எழுதுபவர், வாழக்கையை நன்கு உணர்ந்தவர் என்று வாசிப்போர் உணர்வர்.

ஜூபெர்ட்



670. நல்ல நடையை எளிதாக எழுதவிட இயலாது.

டுரோலோப்

671. ஒருவர்க்குரிய நடை உருவாவது அவருடைய ஒழுக்கம் உருவான பின்னரே யாம.

ஹாலண்டு

போப்

672. தவருன கருத்தை அலங்காரமான நடையில் கூறுவது கோமாளிக்கு கொற்றவன உடையை உடுத்துவது போலாம்.

போப்

# 21. ஹாஸ்யம்

673. உண்மையை உரைப்பதே என்னுடைய ஹாஸ்ய முடிவு. அதுவே தலைசிறந்த ஹாஸ்யமாகும.

பெர்நார்ட்ஷா

674. தத்துவ சாஸ்திரத்தை தனியாகப் படிககலாம், ஆனல் ஹாஸ்யத்தைப் பிறருடன்தான் அனுபவிகக முடியும்.

ஸ்டீவென்ஸன்

675. நகைச் சுவை ஏற்காத விஷயம அறத்தொடர்புடையதோ என்று ஐயுறத் தக்கது; அறத்தொடர்பு இல்லாத ஹாஸயம் பொய்யானதே.

கூப்பர்

676. ஹாஸ்யம் என்பது சோகத்துடன முரண்பட்டதனறு, நகையாடல் முரண்பட்டதே.

கோல்ரிட்ஜ்

677. கேலி செய்வது ஹாஸ்யத்தின் பண்பன்று.

லத்தீன் பழமொழி

678. ஹாஸ்யச் சுவை மிகுந்தவர் அனைவரும் அன்பு மிகுந்தவர் என்பதை அனுபவத்தில் அறிவேன்.

அடிஸன்

679. ஹாஸ்யச் சுவை அறத்தின் நண்பர்களில் ஒன்று, அது இழிந்த காரியங்களை ஏறெடுத்துப் பார்க்காது.

ஸ்விபட்

680. ஒரு சிறிது கெட்ட சுபாவம் இல்லை எனில் ஹாஸ்யம் எதிராளி மனத்தில் தைப்பதில்லை.

ஷெரிடன்

681. முரணான விஷயங்களில் ஒற்றுமை காண்பதே ஹாஸ்யத்தின் லட்சணம்

ஜான்ஸன்

682. நகைச் சுவையாளரை எல்லோரும் விரும்பி நண்ணுவர்; ஆனால் அதற்காக அவர்களுக்கு மரியாதை செய்வதில்லை.

சிட்னி ஸ்மித்

683. ஹாஸ்யம் என்பது யாது? அறிவு நிறைந்த விஷயத்தைச் சாமர்த்தியமாகக் கூறுவதே யாம்.

சேனியர்

634. புயல் காற்று வராமல் கதவை மூடிவிடலாம்; ஆனால் ஹாஸ்யம் நுழைய முடியாத இடம் கிடையாது.

எமர்ஸன்

685. ஹாஸ்யம் என்பது முரணான விஷயங்கள் முட்டிக்கொண்டு சமாதானமடைவதாகும்.

லே ஹண்ட்

686. கண்ணாடிபோல் வழவழப்பானது கிடையாது, அதுபோல உடையக் கூடியதும் கிடையாது. ஹாஸ்யத்தைப்போல் சுவையானதும் கிடையாது, அதுபோல் நிலையாததும் கிடையாது.

பான்

687. இரவு பகலாக எனக்குத் தொல்லைகள் ஏற்படுவதால் நான் நகைக்கவில்லையாயின் இறந்து விடுவேன்.

லிங்கன்

688. ஹாஸ்யம் தன்னைத்தானே வரவேற்றுக் கொள்ளும். சிறந்த ஹாஸ்யத்தை எதிர்த்து பட்டம் பதவி, படிப்பு எதுவும் நிற்கமுடியாது

எமர்ஸன்

689. நான் நகைச்சுவை யுள்ளவனையே நம்புவேன், நகைச்சுவை யில்லாதவனை நம்பமாட்டேன்.

வுட்ரோ வில்ஸன்

690. சிரிப்பை மட்டும் உண்டாக்குவது வெறும் விளையாட்டே, ஹாஸ்யம் என்பது சிறந்த விஷயம். அதைக் கேலி செய்பவன் அதை அறியாதவன்.

பியர்ஸ்

691. வாழ்க்கைத் துன்பங்கள் வராதபடி நான் நகைச்சுவை கொண்டு வேலி கட்டுகிறேன். மனிதன் நகைக்குந்தோறும் வாழ்நாளைக் கூட்டுகின்றான்.

ஸ்டேர்ன்


ஹோமஸ

692. துன்பம வந்தாலும தாக் காவண்ணம பாதுகாத்துககொள்ள நகைச்சுவை யுணர்ச்சிபோல் பயன தருவது வேறு கிடையாது.

ஹிக்கின்ஸன்.

693. நாம் விருந்துக்குப் போகும போது உடுத்த வேண்டிய சிறந்த உடைகளில் ஒன்று நகைச்சுவை யுணர்ச்சி யாகும்.

தாக்கரே.

694. உடல் நலமும் இன்ப வாழ்க்கையும உண்டாக வேண்டுமானல் நகைச்சுவை உணர்ச்சியை வளர்த்துக் கொள். கடவுள் நம்பிக்கைக்கு அடுத்தபடி சிறந்தது அது.

சீவெர்

695. ஹாஸ்யம என்பது சிவப்பு, மஞ்சள், நீலம போன்ற கதிர்களை வீசும. ஆனல் வெண்ணெளி வீசுவது வாலறிவே.

ஹோமஸ்

696. ஹாஸ்யத்தை தன்னைக் காப்பதற்கான கேடயமாகவே பயன்படுத்த வேண்டும், பிறரைக் காயப்படுத்துவதற்கான வாளாகப் பயனபடுத்தலாகாது,

புல்லர்



மாாக் ட்வைன்

697. ஹாஸ்யம் சமபாஷணையின் உப்பேயன்றி உணவன்று.

ஹாஜ்லிட்

698. தீங்கு செய்யாத ஹாஸ்யம் சிந்தனையின் மணமாகும். சுவையுள்ள உணவே உயிரைக் காக்கும். அதுபோல் நகைச்சுவை வாழ்க்கையை நடத்த உதவும்.

ஸிட்னி ஸ்மித்

699. ஹாஸ்யத்தைப் பிறப்பிப்பது மகிழ்ச்சியன்று, துக்கமே. தேவலோகத்தில் ஹாஸ்யம் கிடையாது.

மார்க் ட்வைன்

700. எப்போது எவ்வாறு பயன்படுத்துவது என்பதை அறியாதவருடைய ஹாஸ்யம், கண்டதை எல்லாம் எரிக்கும் காட்டுத் தீயை ஒக்கும்.

வால்டர் ஸ்காட்

701. ஹாஸ்யம் சபையில் விளங்கச் செய்யும் ஆனால் கேலியும் சிரிப்பும் கோமாளியாக ஆக்கி விடும்.

செஸ்டர்பீல்டு

702. உண்மையான ஹாஸ்யத்தின் பிறப்பிடம் மூளையன்று, நெஞ்சே யாகும். அன்பே அதன் சாரம். அது நகையை உண்டாக்காது, புன்னகையையே உண்டாக்கும்.

கார்லைல்

703. அறிவாளிகள்தாம் ஹாஸ்யத்தைச் சுவைக்க முடியும்.

ஸ்டீபன்ஸ்

704. எப்போதும் ஹாஸ்யம் பேசுவது சம்பாஷணையை இழிவாக்கிவிடும். கேட்போரை நிந்திப்பதாகும்.

ப்ரிபட்

705. ஹாஸ்ய உணர்ச்சி யுடையவன் எத்தகைய இன்னல்கள் நேர்ந்தாலும் பொறுமையோடு சகித்துக் கொள்வான்.

மில்ன்ஸ்

706. துக்கத்தில் மூழ்கியவரே ஹாஸ்யம் மிகுந்தவர்கள்.

அரிஸ்டாட்டில்

707. உண்மையான ஹாஸ்யத்தின் அடிநிலை உண்மையே யாகும்.

மெரிடித்

708. வேறுபடும் பொருள்களிடையேயுள்ள ஒற்றுமையையும், ஒன்று போலுள்ள பொருள்களிடையேயுள்ள வேற்றுமையையும் அறிவதே ஹாஸ்யமாகும்.

டி ஸ்டேல்

709. மனத்தில் சாந்தி உடையவரே ஹாஸ்ய உணர்ச்சி உடையவர்.

ஜெரோல்டு

710. ஹாஸ்யம் எங்கு உள்ளதோ அதன் அருகிலேயே சோகமும் இருக்கும்.

விப்பிள்

711. கூர்மையான கத்தி உடையவன் விரல்களை நறுக்குவது போல கூர்மையான ஹாஸ்யமும் உடையவனுக்கு இன்னல் தரும்.

ஆரோஸ்மித்

712. ஒரே விதமான ஹாஸ்யம் நீண்டநாள் இன்பம் தராது.

ரோஷிவக்கல்டு

713. ஹாஸ்யமாகப் பேசுபவன் நகைத்துவிட்டால் அவனுடைய ஹாஸ்யம் பயன்படாது போகும்.

ஷில்லர்

714. பிறர்க்குத் துன்பம் தரும் ஹாஸ்யம் ஹாஸ்யமாகாது.

ஸெர்வான்டீஸ்

715. நல்ல ஹாஸ்யம் புனிதமானது, அதில் குறை காண முடியாது.

செஸ்டர்டன்

716. ஹாஸ்ய உணர்ச்சி நிறைந்தவரே சோகம் நிரம்பியவர்.

டான் மார்க்குஸ்

717. ஹாஸ்யம் பயனுடையதாக ஆவது சொல்வோனைப் பொறுத்ததன்று, கேட்போனையே பொறுத்தது.

ஷேக்ஸ்பியர்

# 22. சிலேடை



அடிஸன்

718. சிலேடையின் வித்து எல்லோர் மனத்திலும் உண்டு. அறிவால் அடககினும் அது பெரிய மேதையிடங்கூட முளைக்கக் கூடியதே.

அடிஸன்

719. சிலேடை ஒரு உயர்ந்த பொருளே. அது மனத்தில் நிறையும் சிறு கவிதைபோல் சிறந்ததே.

லாம்

720. சிலேடை என்பது செவியினுள் சுடும் துப்பாக்கியாகும். அறிவைக் கிளறும் இறகன்று.

லாம்

721. சிலேடையை எந்த முட்டாளும் செப்ப முடியும்.

ஷேக்ஸ்பியர்

722. கெட்ட குணமில்லாதவன் எவனும் சிலேடைக்கு விரோதியாயிருக்கக் கண்டதில்லை.

லாம

723. சிலேடை கூறத் தெரியாதவரே சிலேடையை மிகுதியாக வெறுப்பவர்.

போ



எமர்ஸன்

**724.** *சாதாரண மக்கள் சிலே டையை விரும்பவும் பயன் படுத்தவும் செய்வார்களானால், அந்த சமுதாயம் உயர்ந்த பண்பாடு உடையதாகும்.*

லிச்சன்பர்க்

**725.** *உரையாடல் சுவையுடையதா யிருப்பதற்குச் சிலேடையும் வேண்டியதே.*

பாஸ்வெல்

726. *சிலேடை செய்பவர் ரயில்பாதையில் கற்களை வைக்கும் சிறுவர்களை ஒப்பர்.*

ஹோம்ஸ்

# 23. உயர்வு நவிற்சி

727. *சிலர் உணர்ச்சி மிக்கவராயிருப்பதால் உரைப்பது உண்மையன்று என்று உணராமலே கூட்டியும் குறைத்தும் கூறிவிடுவர்.*

எட்வார்ட்ஸ்

728. *உயர்வு நவிற்சி காணப்படாதவர் உலகில் கிடையார்.*

எமர்ஸன்

729. உயர்வு நவிற்சி என்பது ஓர் இறைச்சித் துண்டை இரண்டாக் குறுக்கு வெட்டுதல் போன்றதாகும்.

போப்

730. உயர்வு நவிற்சி என்பது அறிவின் குறையைக் காட்டும். உண்மையை உரைத்தாலும் உண்மையில்லை என்றே எண்ணுவர்.

எட்வார்ட்ஸ்

731. உண்மை உரைப்பவர் தாம், ஆயினும் உணர்ச்சி வயப்பட்டு உயர்வு நவிற்சியில் இறங்கி விடுவர்.

போயஸ்

732. உயர்வு நவிற்சியில் திளைப்பவர் தம்மைத் தாமே தாழ்வு படுத்துவோராவர்.

ஸிம்மன்ஸ்

733 சிலர்க்குச் சாதாரண விஷயங்களைச் சாதாரண முறையில் கூறமுடியாது. நாரைகளை எல்லாம் அன்னங்களாகவே நவில்வர்.

ஓவன்

734. உயர்வு நவிற்சியில் உரம் என்பதே இல்லை. உண்மைகூட உயர்வு நவிற்சியால் உரமற்றதாக ஆகி விடும்.

எட்வார்ட்ஸ்

735. உயாவு நவிற்சி என்பது பொய கூறுதல் என பதில் ஒரு பகுதியே யாகும.

கிரேஸியன்

736. உயர்வு நவிற்சி என்பது பொயயின ரத்த பந்துவே. அதனுல் அதைப்போலவே கண்டிககத் தகக தாகும.

பாலோ

737. உயர்வு நவிற்சி என்பது முனை மழுக்கப்பட்ட உண்மையே யாகும்.

இப்ஸன்

# 24. கேலி இலக்கியம்

738. நகைச் சுவையுடன் எழுதும கேலி இலக்கியம் நஞ்சு தோய்த்த அமபு, காயப்படுத்துவதுடன காயத்தை ஆறவும ஒட்டாது.

அடிஸன்

739. கேலி இலககியம அறிவுடன் இயறறப்பட்டால் சமூகத்தில் வேரூன்றிய தவறுகளைச் சாயத்துவிடும.

பாயலோ

740. சட்டத்துககு அஞ்சாதவர்கேலி இலககியம் கண்டு நடுங்குவர்.

பைரன்



இப்ஸன்

741. கேலி இலக்கியம் என ஆயுதம், ஆனால் கண்டவர்களை எல்லாம கேலி செய்வதில்லை.

ஹோரேஸ்

742. கேலி இலக்கியத்தைப் படிப்பவர் அதில் தம் நிழலைக் காண்பதில்லை, பிறர் நிழலையே காண்பர், அதனால்தான் அதை எல்லோரும் வரவேற்கின்றனர்.

ஸ்விப்ட்

743. தவறுகளைக் கண்டிப்பதே என்னுடைய நோக்கம். தவறு செய்தவர்களைத் தண்டிப்பதன்று.

மார்ஷியல்

744. கேலி செய்யப்படத் தக்கவர் கேலி இலக்கியத்தை வெறுப்பர்.

ஹாட்வெல்

745. எழுத்தாளர்களைப் பற்றிய இகழ் இலக்கியம் அவர் உள்ளபோது பொய் பேசும். புகழ் இலக்கியம் அவர் இறந்தபோது பொய் பேசும்.

வால்டேர்

746. நான் என் இளமையில் மனிதகுலத்தைப்பற்றி இகழ இலக்கியம் எழுத எண்ணினேன, ஆனால் இப்


ஆர்னல்ட் பெனட்

போது என முதுமையில் மனித குலத்திடம மன்னிப்புகேட்க விரும்பு கின்றேன

ஹொரேஸ வால்போல்

## 25. கலைச் சுவை

747. சுவையறிவு என்பது மனிதப் பண்பின தலை சிறந்த அம்சமாகும.

ஷில்லர்

748. இசை, ஓவியம், சிற்பம இவற்றில் எதிலே னும் சுவையுடையவன் ஆருவது பொறியுடையவனுவான்

அடிஸன்

749. இலக்கியச் சுவை என்பது ஒரு நூலின் அழகு களைக் காண்பதில் மகிழ்ச்சியும குறைகளைக் காண்பதில் வெறுப்பும் உடைமையாகும்.

அடிஸன்

750. தூய இலக்கியச் சுவை என்னும புனிதமான வரப்பிரசாதம பெற்றவரே பெரும பேறு பெற்றவர்.

அரிஸ்டோபனீஸ்

751. சரியான சுவை தவருன சுவையினும சீரியது தவருன சுவை சுவையின்மையினும சீரியது.

ஆர்னல்ட் பென்னட்

752. தவறான இலக்கிய சுவை என்பது தவறான ஒழுக்கத்தில் ஒரு வகையாகும்.

போவி

753. சுவை யறிவு மிகுதி பொதுவாக தூய நெருக்கு டன் சேர்ந்தே காணப்பெறும்.

பீல்டிங்

754. இலக்கிய சுவை என்பது தேனீயானது பூவி லுள்ள அமிர்தத்தைக் கவர்ந்துகொண்டு பிறவற்றை ஒழித்து விடுவது போன்ற ஒருவகை அறிவாகும்.

கெரவில்

755. சுவையறிவு என்பது ஆன்மாவிடமுள்ள தூய உணர்ச்சிகளைப் பொறுத்ததாகும்.

ரெய்னுல்ட்ஸ்

756 ஒரு நாட்டு மக்களுக்குச் சுவையறிவு உண் டாக்குபவனே தலை சிறந்தவன். அவனுக்கு அடுத்தபடியி லுள்ளவன் அந்த அறிவைப் பயன்படுத்துபவன்.

ரெய்னுல்ட்ஸ்

# 25. பாராட்டுதல்

757. பிறரிடம் குணங்களைக் காண்பவனே தன் னுடைய குணங்களைப் பிரமாதப் படுத்தமாட்டான்.

ஐஸக் பாரோ

758. நான ஒரு பெரிய விஷயத்தைக கண்டுளளேன் எதை நானநேசிக்கினறேறே அதுவே எனககுசசொந்தம எனவீட்டிலுள்ள பொருளகளில் எனககுச் சொந்த மானவை நாறகாலி முதலியனவல்ல, தலை சிறந்த இலக்கி யங்களே.

பீபஸ்கோ

759. அழகுக்கு அடுத்தபடியிலுள்ளது அழகாகப் பாராட்டுவது.

புல்லர்

760. சிறந்ததைப் பாராட்டுவது என்னும் நலத்தை யாரும் நம்மிடமிருந்து பறித்துவிட முடியாது.

கதே

761. கவிஞன இயறறிவிட்டான், இனி அது அனு பவிப்பார்க்கே உரியது.

ஹவல்ஸ்

762. பாராட்டில் விருப்பமே மனித குணத்தில் காணும ஆழந்த தத்துவம.

வில்லியம் ஜேம்ஸ்

763. நல்ல எழுத்தாளன் நீண்டநாள் பாராட்டுப் பெறுமலிரான். பெரியோரைப் பெரியோர் கவனியாம லிருப்பதில்லை.

லாண்டார்

764. விரிந்த உள்ளம் உடையவரே பெரியோர் உயர்வை அறிய முடியும்.

பாஸ்கல்



தாககரே

765. எந்த மனிதனையும் அவனுக்கு ஒப்பானவர் அல்லது உயர்ந்தவர் இவரே பாராட்ட இயலும்.

ரஸ்கின்

766. நாம் பிறர் உயர்வைப் பாராட்டுவதன் மூலம் அதை நம்முடைய தாக்கிக கொள்கின்றோம.

வால்டேர்

767. பாராட்டு உயர்ந்தோரை உயருமாறு உற்சாக மளிக்கும். தாழ்ந்தோர் குறிக்கோள் அதுமட்டுமே.

கோல்ட்டன்

768. சிறப்பு அடைவதற்கு அடுத்தபடியிலுள்ளது சிறப்பைக் கண்டவிடத்துப் பாராட்டுவதாகும.

தாக்கரே

769. உயர்ந்ததைப் பாராட்டுபவன் அநேகமாக உயர்ந்தவனுவே ஆகியிருப்பான்.

நெக்கர்

770. பிறர் சிறப்பைப் பாராட்டுபவனே தன் சிறப்பை வியவாதிருப்பான்.

பாரோ



வால்ட் விட்மன்

771. உயர்ந்த கருத்தைக் கூறக் கூடியவன பிறந்தால் அதை உணர்ந்து போற்றக் கூடியவனும பிறக்கவே செயவான.

ஜூபர்ட்

772. உன்னிடம கவிதை யில்லை யானல் ஓரிடத்திலும கவிதையைக காணமாட்டாய்.

ஜூபர்ட்

773. உண்மையான சிறப்புடையது எதுவும் பாராட்டப்படாமல் போகாது.

ஆல்காட்

## 27. விமர்சனம்

774. கலைகள் வளரும அளவே விமர்சனக் கலையும் வளாவதாகும.

பர்க்

775. விமர்சனத்தைப் பற்றிய விதிகளை நான் கவனிப்பதில்லை. கலைப் பொருள் உள்ளத்தில் களிப்பு உண்டாககுகிறதா, உண்டாக்குமானல் அது சிறந்ததே.

ஜெபர்ஸன்

776. விமர்சனத்தின் தலையாய நோக்கம நூலை மதிப்பதற்கு வேண்டிய விதிகளை வகுப்பதினும, நூலை எழுதுவதறகும வேண்டிய முறைகளை வகுப்பதகுாம.

கோல்ரிட்ஜ்

777. நியாயமான விமர்சனம் மூன்று வினாக்களுக்கு விடைகூறும். ஆசிரியனா நோக்கம் யாது? அதில் வெற்றி கண்டுவிட்டானா? அந்த நோக்கம் ஏற்றுக்கொள்ளத் தக்கதுதானா?

லாம்

778. சினம் மூட்டுதலின்றிச் சிறந்த விமர்சனம் பெற முடியாது உண்மை எப்போதும் கசப்பாகவே இருக்கும்.

தோரோ

779. விமர்சனம் தன்னுடைய சிகரத்தை எட்டும் போது உயர்ந்த கலையாக ஆகும்.

வால்ட் விட்மன்

780. விமர்சனம் என்பது ஒரு கலை, அதைக் கற்பிக்கவும் முடியாது, காட்டவும் முடியாது. தானாக அமைய வேண்டிய சக்தியே யாகும்.

அமீல்

781. விமர்சனத்தைக் கண்டிக்கின்றனர். விமர்சனம் தேவை என்பதற்கு அந்தக் காரணமே போதும்

பிரௌனெல்

782. ஆசிரியன் நோக்கம் யாது, அது கைகூடியதா என்ற கேள்விகள் தான் விமர்சனத்தின் தனி முறையாகும்.

ஸபிங்கார்ன்

783. விமர்சனம் செய்வது எளிது, சிறப்பை உணர்வதுதான் கடினம்.

வாவனார்ஸ்

784. உண்மையான விமர்சனத்தின நோக்கம் புகழ்வதோ இகழ்வதோ அன்று; குணங்களை எடுத்துக் காட்டி ஏற்ற மரியாதை செய்வதே யாகும.

ஸிம்ஸ்

785. இன்ன குணங்கள் இல்லை என்று கூறுவது எத்தகைய பயனுமில்லாத விமர்சனமாகும்.

கிரிஸ்வோல்ட்

786. விமர்சனத்தின் நியாயமான நோக்கம் நூலிலுள்ள சிறப்புக்களைக் காண்பதே யாகும், குறையுள்ள நூல்கள் தாமாகவே இறந்து போகும்.

போவி

787. திறமையைக் காட்டுவது அழிப்பதிலா? அற்ப அறிவும் முரட்டுக்கையும அந்த வேலையைத் திறமபடச் செய்துவிடும்.

பர்க்

788. மௌனமே சில வேளைகளில் மிகக் கடுமையான விமர்சனமாக ஆகிவிடும்.

பக்ஸ்டன்

789. விமர்சகன் ஆசிரியனை எதிர்ப்பவனாக இல்லாமல் நண்பனாக இருப்பதே தலை சிறந்த விமர்சனமாகும.

டிஸ்ரேலி

790. எதிர்த்தாலும் பாதகமில்லை, ஏறெடுத்துப் பாராமல் மட்டும் இருந்துவிடலாகாது, ஆசிரியனுக்

குச் செய்யக்கூடிய பெருங்கேடு அவனுடைய நூல்களைப் பற்றி மௌனமாய் இருந்து விடுவதே.

ஜான்ஸன்

791. நியாயமாக மதிப்பிடுவதையே விமர்சனம் என்று அரிஸ்டாட்டில் கூறினார்.

ஜான்ஸன்



மாணடேயன்

792. அழகான பொருள்களைக் கண்டு மனம் உருகும் இன்பத்தை இழக்கச் செய்யும் விமர்சனம் விமர்சனமாகாது.

லாபுருயர்

793. விமர்சனத்தின் ஆற்றல் விமர்சனம் செய்யும் பொருளின ஆற்றலின்மை அளவினதே.

லாங்பெல்லோ

794. பொருள்களை விளக்குவதைவிட விளக்கங்களை விளக்குவதற்கே முனைகின்றனர். பொருள்களைப் பற்றிப் புத்தகம் எழுதுவதை விட்டு புத்தகங்களைப் பற்றியே புத்தகங்கள் எழுதுகின்றனர்.

மாஸ்டேய்ன்

795. நூல் எழுந்த காலத்து மக்களின் கருத்துக்கு இசையவே எந்த நூலையும் மதிப்பிடல் வேண்டும்.

பேட்டர்



ஹோமர்

796. சிலர் நூல்களை மதிப்பிடாமல் நூலாசிரியரின் பெயரையே மதிப்பிடுகின்றனர். நூலை விட்டுவிட்டு நூலாசிரியனையே புகழ்வோர் இகழ்வோர் செய்கின்றனர்.

போப்

797. உன்னுடைய நூலைப் பகைவனிடம் கொடுத்துப்படிக்கச் சொல்லி அதைத் திருத்திக்கொள், நண்பன் உன்னைப் போலவே குறைகள் காணமுடியாது.

போப்

898. விமர்சகர்கள் மரத்திலிருந்து புஷ்பங்களைப் பறிக்கும்போது புழுக்களையும் சேர்த்தே பறித்துவிடுகின்றனர்.

ரிக்டர்

899. விமர்சனத்தின் நோக்கம் நல்லதையெல்லாம் அறிவதும விளைவதும பிறர்க்குக் கூறுவதுமாகும.

செயின்ட்ஸ்பரி

800. மதிப்பிடுவோர் மறந்துவிடும பெரும பிழையாதெனில் ஆசிரியன் எதை நமக்கு அளிக்கவிரும்புகிறான் என்பதை அறிய மறுப்பதேயாகும.

செயின்ட்ஸ்பரி

801 தம குறைகளைப பிறர் கூறக் கேட்டுத் திருத்திக கொள்ளும வாய்ப்புடையோர் பேறு பெற்றவரே.

ஷேக்ஸ்பியர்

802. மனிதர்களுள் மிக்கத் தகாதவன் மிதமிஞ்சிய விமர்சகனே. குறைகூறும் நோக்கம் ஒன்றே உடையவனா யிருப்பதால் அவன் ஒருக்காலும் தோழமைகொள்ளான், துன் புறுத்துபவனே யாவான்.

ஸ்மைல்

803. விமர்சகனுடைய வேலை பூமியின் அடியில் உள்ள நீரோட்டத்தைக் கண்டு கூறுவதையே ஒக்கும்.

ஸிமண்ஸ்

804. குற்றம் எழுந்ததற்கு காரணம் குற்றவாளி என்பது போல் நூல் எழுந்ததற்குக் காரணம் நூலாசிரியர், என்னும் கொள்கை தவறானது. காரணங்கள் பயன்களே.

வாலெரி

805. விமர்சகக் கலை இல்லாத காலம் கலையே இல்லாத காலமாயிருக்கும், அல்லது கலையானது முன் னேற்றம் காணாது தேங்கி நிற்கும் காலமாயிருக்கும்.

ஆஸ்கார் ஒய்ல்ட்

# 28. விமர்சகர்

806. சிறிதும் செய்யாதவனே பெரிதும் சினப்பவன்.

ஹோமர்

807. குறைகளை ஆராயாமல் குணங்களை ஆராய்ந்து மறைந்து கிடக்கும் மணிகளைப் பொறுக்கித் தருபவனே உண்மையான விமர்சகன்.

அடிஸன்

808. இக்காலத்தில் நல்ல விமர்சகனைக் காண்பது அரிது, ஆயினும் முட்டாள் ஒவ்வொருவனும் விமர்சனம் செய்யத் தகுதியுடையவனாக எண்ணிக்கொள்கிறான்.

புல்வர் லிட்டன்

809. விமர்சகன் கூறுவதை நம்புவதைவிட டிசம்பரில் ரோஜா பூக்கும் என்றும் ஜூனில் பனிக்கட்டி பெய்யும் என்றும் நம்பிவிடலாம்.

பைரன்

810. விமர்சகன் என்பவன் தனக்கு விளங்குவதைப் புகழ்ந்தால் போதும்.

டாப்ஸன்

811. சிறந்த நூல் எழுதாதவன் எவனும் பிறர் நூல்களை மதிப்பிடத் தகுந்தவன் ஆகான்.

அடிஸன்

812. விமர்சகனுடைய தலையாய வேலை கதை எழுதுபவனிடமிருந்து கதையைக் காப்பதே யாகும்.

லாரன்ஸ்

813. விமர்சகர் என்போர் புதிதாக வரும் ஆசிரியனை விசாரித்தே கலை என்னும் பெருஞ் சேனைக்குள் புக அனுமதிக்கும் காவற் காப்போரே யாவர்.

லாங்பெல்லோ

814. விமர்சகர்களா! அந்தப் பெயரைக் கூறக்கூட அஞ்சுகின்றேன். அவர்கள் புகழுநர்களுக்குச் செல்லும் ஆற்றலை களவரே ஆவர்.

பர்னஸ்



பர்ன்ஸ்

815. எழுதியவனே தான் எழுதிய நூலுக்கேற்ற தலைசிறந்த விமர்சகன். எத்தனை அறிவாளிகள் புகழ்ந்தாலும் தனனுடைய அறிவு ஏற்காத நூல் ஏற்கத் தக்கதன்று.

சோமர்செட் மாவாம்

816. கவிஞன் ஒவ்வொருவனும விமர்சகனைத் தோளில் சுமககவேண்டிய நிர்ப்பந்தம் உள்ளதுபோன்ற கொடுமை வேறு கிடையாது.

தாமஸ் மூர்

817. விமர்சகன என்பவன், எவன்? எல்லோரும விருமபுவதை இகழவும், எவரும் காதால் கேட்காததை எல்லாம புகழவும் செய்பவனே ஆவான்.

நாரிஸ்

818. விமர்சகன் நாடகம பார்க்கும்போது நாடகம் பிடிக்கிறதா என்று ஆராய்ந்துகொண்டிருப்பதால், நாடகம முடிந்ததும நாடகத்தைப் பார்க்கவில்லை என்பதை உணர்கிறான்.

ஓயிட்


போப்

819. எழுதத் துணியாதவரும் எழுதத் தெரியாதவருமே பழிவாங்கும் வெறுப்போடு விமர்சகராக ஆகி விடுகின்றனர்.

டிரைடன்

820. முட்டாள்கள் கோபிக்கட்டும், அது எனக்கு மகிழ்ச்சியே. நான் முட்டாள்களைக் கண்டிக்க எழுதுகிறேனேயன்றி முட்டாள்களிடம் புகழ்பெற எழுதவில்லை.

காங்கிரீவ்

821. விமர்சகர்கள் மாமிச பட்சணிகள், அதனால் பிணத்தை விரும்புதல் இயற்கையே.

போப்

822. உண்மையான விமர்சகன் கவிஞனுக்கு உற்சாகமூட்டுவான். போற்றத் தக்கதைப் போற்றுமாறு உலகுக்குக் கற்பிப்பான்.

போப்

823. பண்டைக் காலத்தில் மிகச்சிறந்த விமர்சகராயிருந்தவர்கள் எல்லாவித நூல்கள் எழுதுவதிலும் சிறந்தவர்களாயிருந்தனர்.

அடிஸன்

824. குளவி குதிரையைக் கொட்டித்துடிக்கச் செய்யலாம், ஆயின் குளவி ஒரு சிறு பூச்சி; குதிரை குதிரையே.

ஜான்ஸன்

825. தோல்வியுறும் கவிஞன் துணைபுரிந்தும் விமர்சகன் ஆவதுண்டு.

ஷென்ஸ்டன்

826. உயர்ந்த கவிஞன் சிறந்த விமர்சகனாகவும் இருப்பதுண்டு. ஆனால் விமர்சகன் கவிஞன் ஆவதில்லை.

ஷென்ஸ்டன்

827. விமர்சகரே! குறை கூறவேண்டிய இடத்தில் குறைகூறும், குணம் கூறத்தக்க இடத்தில் குணம் கூறும், எப்போதும் பண்புடைமை வேண்டும்.

கோல்ட்ஸ்மித்

828. எழுதுபவர் தம்முடைய நூலைப்பற்றிக் கருத்துக் கூறுவது கேட்டால் அதைப் போன்ற வேதனை வேறு கிடையாது. அவரிடம் உண்மை கூறவேண்டிய கடமையில்லை.

ஜான்ஸன்

829. இயற்கை அன்னை தன் குழந்தைகள் ஒவ்வொருவருக்கும் அவரவர்க்கேற்ற வேலை ஒன்று வகுத்துள்ளாள். எழுத விரும்பியும் எழுத முடியாதவர் எழுதிய நூலை மதிப்பிடலாமாம்!

லவல்

830. கவிஞராகவோ எழுத்தாளராகவோ ஆக முயன்று இயலாது போனவர்கள் விமர்சகராக ஆகிவிடுகின்றனர்.

கோல்ரிட்ஜ்

831. அழுக்காறு இல்லை என்பர், ஆயினும் நம்முடைய புத்தகத்தைத் திருடுவர், நம்முடைய பெயரைக் கொல்வர்.

கோல்ரிட்ஜ்

832. பொதுவாக சிறந்த கவிஞர் உயர்ந்த விமர்சகர் ஆவதில்லை.

மக்காலே

833. விமர்சகரே! உம்முடைய ஆணவத்திற்காக மக்கள் மனத்தை மகிழ்விக்கும் கவிஞரைக் கொலை செய்யாதீர்.

எமர்ஸன்

834. இயற்கை அன்னை எழுத்தாளரைச் செய்து முடித்தபின், எஞ்சிய துண்டு துணுக்குகளைக்கொண்டே விமர்சகர்களைச் சிருஷ்டித்தாள்.

ஹோரம்ஸ்

835. ஏதேனும் உபயோகமான கருத்துக் கூறும் விமர்சகர் உண்டானால், அவர் பொதுமக்களே.

மார்க் ட்வைன்

836. அறிவோடு கூடிய ஐயமே சிறந்த விமர்சகனிடமிருக்க வேண்டிய முதற் பண்பாடாகும்.

லவல்

837. ஒரு புதிய உண்மையைக் காண்பதில் உற்சாகமடைவதுபோலவே, ஒரு பொய்யை சிருஷ்டிப்பதிலும், உற்சாகமடைவோர் உளர்.

ஹக்ஸ்லி

838. விமர்சகன ஒரு கையில் நூலை எடுத்து வைத்துக்கொண்டு மறு கையால் தனனைத் தீட்டுகிருன் இறுதியில் எடுத்த நூலைக காணேம, அவனையே காண்போம.

ஹாலண்ட்



பிரான்ஸ்

839 குளவிகள் கொட்டுவது இயல்பு, கோபத்தாலனறு. அது போல் விமர்சகர் விருமபுவது நம முடைய குருதியே யன்றி வேதனை யன்று.

நீட் சே

840. விமர்சகனுடைய முதற் கடமை எக்காலத்திலும எல்லா விஷயத்திலும் வாயைத்திறவாதிருப்பதே.

ஆஸ்கார் ஒயிலட்

841. தலை சிறந்த நூல்களிடையே செல்லும ஆனமாவின அனுபவஙகளைக் கூறுபவனே உண்மையான விமர்சகன.

அனட்டோல் பிரான்ஸ்

842. தர்பாட் என்னும மீனுககு ஒரு பககமாகவே கண்கள உள. அதுபோல் விமர்சகன ஒனறு புகழுவான, அல்லது இகழ்வான.

லாண்டார்

843. குறைகளைத் தேடி அலையும விமர்சகன் தனனுடைய திறமையிடம சிறிது ஐயம கொள்வது நலம.

ஜூனியஸ்


விக்டர்ஹூகோ

844. விமர்சகர்கள் செடிகளைக் கடித்து வளர வொட்டாமல் செய்யும் வெள்ளாடுகளை ஒப்பர்.

வாஷிங்டன் இர்விங்

845. சிறந்த நூலைக் கண்டதும் குறைகூற விரும்புபவன் எவனும் சிறந்த நூலை உண்டாக்க முடியாது.

ஆய்க்கன்

846. தாமாக நூல் இயற்ற முயலாதவரும் முயன்று தோல்வியுற்றவருமே வீராவேசமான விமர்சகர் ஆவர்.

ஹாஜ்லிட்

847. கரண்டியால் செதுக்கக் கூடியதைக் கத்தியால் செதுக்கலாகாது என்று செதுக்குச் சித்திரக் கலையில் கூறுவது விமர்சனக் கலைக்கும் பொருந்தும்.

பக்ஸ்டன்

848. பானை சட்டியைப் பார்த்து "அட கறுப்பு மூஞ்சியே! அப்புறம் போ" என்று கூறியது!

செர்வான்டீஸ்

849. நிகழ்காலம் இறந்த காலத்தைக் குறை கூறினால் எதிர் காலம் சிறப்படைவது நிச்சயமில்லை.

சர்ச்சில்

850. விமர்சகர் என்போர் இலக்கியத்திலும் கலையிலும் தோல்வியுற்றவரே.

டிஸ்ரேலி

851. குறை யில்லாதிருப்பதினும் குறை கூறுதல் எளிது.

டிஸ்ரேலி

852. பிழையுள்ள பாடலுக்காகப் புகழுடைவதைவிட பிழையில்லாத பாடலுக்காக இகழுடைவது நலம்.

விக்டர் ஹுகோ

# 29. எழுத்தாளன்

853. மக்கள் வாசிக்காத நூல்களை எழுதுபவன் எழுத்தாளனல்லன

மார்ஷியல்

854. எழுதத் தக்க செயல்களைச் செய்வதற்கு அடுத்தபடியாகச் சிறந்தது, படிக்கத் தக்க விஷயங்களை எழுதுவதாகும்.

செஸ்டர்பீல்டு

855. சிறந்த எழுத்தாளன வாசகர்களுடைய நண்பனும் வள்ளலுமாவான்.

மக்காலே

856. ஆசிரியர்கள் இருவகையினர்: சுரங்கத்தைத் தோண்டிசொர்ணம எடுப்போர், சொர்ணத்தைத் தூய்மை செய்து சுடர்விடச் செய்வோர்.

கோல்ட்டன்

857 ஆசிரியன பதவி அரியதோர் பதவி, அதைப் பொதுநலத்துக்ககாகப பயனபடுததாமல சொநத நலத துககாகப பயனபடுததுவோா அழிந்து மடிவுறுக.

கிரீலி

858. பிறகாலததவரும படிககக வேணடுமானல முறகாலத்தவா நூல்களில் எந்தப பகுதிகள சுவை தருவன என்று ஆராயநது பாா.

ஸ்விபட்

859. கருததானறுது படிபபது சோமபேறிகளின பொழுதுபோககுககளில ஒன்று. அதனல கறக வேணடும என்ற கருத்தின்றிப படித்தால போதும என்ற கருததுடன எழுதுவோர் பலர்.

ஜான்ஸன்

860. எழுத்தாளனுடைய காலத்தில பெருமபகுதி செலவாவது எழுதுவதறகாக அவன படிப்பதிலாகும. நூல ஒன்று எழுத நூல நிலையம முழுவதையும ஆராய வதுமுணடு.

ஜான்ஸன்

861. நனருக எழுதாதவர்கள மொழியைக கெடுத்து விட முடியாது, மொழி கெடுவது நனருக எழுதுவதறகு வேணடிய அறிவுடையோா நனருக எழுதாதிருபபதே.

காமபெல்

862. எழுத்தாளர்கள ஒன்று சோவாாகளானல எண்ணியவாறு மககள மனத்தை உருவாககி விடலாம.

பர்க

863. மக்கள் தங்களை அறியாமலே எவற்றைச் சிந்திக்கவோ உணரவோ செய்கிறார்களோ அவற்றை எழுதுபவனே பெரிய எழுத்தாளன். சாதாரண எழுத்தாளன் மக்கள் கூறக் கூடியதையே எழுதுவான்.

லிச்சன்பெர்க



டால்ஸ்டாய்

864. எழுத்தாளன் கூறுவதை ஏற்றுக் கொள்ள வேண்டாம், செவி கொடுத்துக் கேட்டால் போதும். இதுவே எழுத்தாளன் வாசிப்போரிடம் எதிர் பார்ப்பது.

லாங்பெல்லோ

865. எழுத்தாளன் ஆவதற்கு சாமர்த்தியம் மட்டுமிருந்தால் போதாது, சரக்கு மிருக்கவேண்டும்.

எமர்ஸன்

866. புரிந்து கொண்டால் போதும், புகழ வேண்டாம் என்பதே நல்ல எழுத்தாளர்கள் விரும்புவது.

நீட்சே

867. நல்ல நூல்கள் மிக அருமையாகத் தோன்றுவதற்குக் காரணம், எதையு மறிந்த எழுத்து வல்லுநர் அருமையா யிருப்பதே.

பேஜ்ஹாட்

868 எழுத்தாளன் தன் ஆன்மாவைத் திறந்து காட்டுமளவே நமக்குத் தேவை யாவான்.

டால்ஸ்டாய்



869. எழுத்தாளன தொழில் மிகுந்த மேன்மையுடையது. உண்மைக்கு உறைவிடமா யில்லையெனில் குப்பைத் தொட்டிக்கே செல்ல வேண்டியவன.

பிராண்டீஸ்

870. எழுத்தாளர்கள் தாம்சிந் திப்பதை எழுதுவதில்லை. பிறர் சிந் திப்பதாகத் தாம்சிந்திப்பதையே

கௌப்பர்

எழுதுகின்றனர்.

ஹப்பார்ட்

871. நல்ல விஷயம என்பதற்காக நான் இதை எழுதவில்லை. இது என் மனத்தில் நிறைந்திருந்தது என்பதற்காகவே எழுதினேன.

இப்ஸன்

872. ஆசிரியனுடைய கவலைகளை ஆசிரியர்களைத் தவிர வேறு யாரும் அறியார்.

கௌப்பர்

873. படிப்போருடைய காலத்தை வீணாக்காமல் அவர்க்கு அதிகமான அறிவை அளிப்பவனே சிறந்த எழுத்தாளன்.

ஸிட்னி ஸ்மித்

874. எல்லா நூல்களிலும், எழுத்தாளன் தன் குருதியைக்கொண்டு எழுதியதையே நான் போற்று வேன.

நீட்சே

875. எழுத்தாளனாக விரும்பினால் எழுதிக் கொண்டே இரு.

எபிக்டெட்டஸ்

876. ஆசிரியன் எப்படி, அப்படி அவனுடைய நூல்.

ஜான் ரே

877. பழக விரும்பும் நண்பனைத் தேர்ந்துகொள்வது போலப், படிக்க விரும்பும் நூலையும் தேர்ந்துகொள்ள வேண்டும்.

டில்லான்

878. நூல் ஒன்றை உண்டாக்குவது கடிகாரம் ஒன்றை உண்டாக்குவது போன்ற ஒரு கைத்தொழிலே. எழுத்தாளனாக இருக்க மேதைக்கும் மேம்பட்டவை தேவை.

லாபுருயர்

879. ஆசிரியர்களைக் கணிக்கும் விதிகள் விநோதமானவை. பெரியவர்களைப் பைத்தியக்காரர் என்றும், சிறியவர்களைப் பேதையர்கள் என்றும் கூறுவர்.

போப்

880. எழுத்தாளரில் சிலர் தம்முடன் வாழ்பவரைத் துன்புறுத்துவது போதாதென்று, வருங்காலத்தவரையும் துன்புறுத்துவோரே யாவர்.

மாண்டெஸ்கியூ

881. ஒவ்வொரு நாட்டு மக்களின் தலையாய புகழ் அந்நாட்டு ஆசிரியர்களாலேயே உண்டாவதாகும்.

ஜான்ஸன்

882. ஒருவன் ஒரு தடவை ஆசிரியனாக ஆகிவிட்டால் அவன் ஆயுள் முழுவதும் ஆசிரியனே.

ஹ்யூம்

883. ஆசிரியனுடைய சிறந்த பகுதி அவனுடைய நூலிலேயே காணலாகும்.

ஜான்ஸன்

884. ஆசிரியனுக்கு ஏற்படக்கூடிய தலையாய துர் அதிர்ஷ்டம் பிற ஆசிரியர்களுடைய அழுக்காறுமன்று, அதிகாரிகளுடைய இகழுமன்று, அறிவிலிகளால் விமர்சனம் செய்யப்படுவதே.

வால்ட்டேர்

885. ஆசிரியனை நாம் மதிப்பிடுவது அவன் வாழும் போது அவனுடைய தாழ்ந்த நூல்களைக்கொண்டு; அவன் இறந்த பின்னர் அவனுடைய உயர்ந்த நூல்களைக்கொண்டு.

ஜான்ஸன்

886. தன்னுடைய நெஞ்சில் தான் காண்பவற்றை எழுதினால் அதைப் படிப்போர்க்குப் பஞ்சமில்லை.

ஹொள

887. ஆசிரியன் மயமாகவே யிருக்கும் ஆசிரியனை யாரும் விரும்புவதில்லை.

பைரன்

888. நாம் நினைக்கும் வண்ணம் ஆசிரியனுடைய பேச்சு சிறந்திருப்பதில்லை ஆயினும் பிறர் பேச்சினும் சாலச் சிறந்ததே

ஹாஜ்லிட்

889. ஆசிரியன் பலகாரம செய்பு வனை ஒப்பான; இனியன ஆக்குவது அவன வேலை, அவற்றை வாங்கிச் சுவைப்பது நமமுடைய வேலை.

லே ஹண்ட்

890. ஆசிரியனுடைய குணங்களை அறிந்துகொண்டால், அவனுடைய நூல்களை அறிந்துகொள்வது எளிது.

லாங்பெல்லோ



ரிக்டர்

891. சிறந்த எழுத்தாளர்களாகப் பேர் வாங்குவோர் பெரும்பாலும் உண்மையில் எழுத்தாளர்களாகக் கருதக் கூடாதவரே.

போ

892. ஆசிரியர்களை மூன்று இனங்களாகப் பிரிக்கலாம. எரி மீன்கள், கிரகங்கள், நிலை மீன்கள்.

ஷோபனர்

893. ஆசிரியன் என்பவன் ஓர் அபூர்வமான சிருஷ்டி, அடக்க முடியாத ஒரு குணத்தோடு பிறப்பவன்.

டிஸ்ரேலி

894. நிறையப் படியாமல் எழுதத் தொடங்காதே, ஆசை நிறையாதவரைப் படிக்கத் தொடங்காதே.

ரிக்டர்



நீட்சே

895. சிறந்த ஆசிரியனிடமுள்ள அறிவு அவனுடையது மட்டுமன்று, அவனுடைய நண்பர்களுடையது மாகும்.

நீட்சே

896. ஆபாச விஷயங்களை எழுதாதிருப்பதே ஆசிரியனுக்குரிய கற்பாகும்.

மாண்டன்

897. ஆசிரியர்களுக்குள்ள துன்பங்கள் மூன்று வெளியிட கூடிய நூலை எழுதுவது, எழுதியதை வெளியிட யோககியர்களைக காண்பது, வெளியிட்டபின படிப்பதறகு அறிவுடையர்களைப் பெறுவது.

கோல்ட்டன்

898. சுகமாக வாழ்வதினும சிறந்த நோக்கமில்லாதவன ஆசிரியத் தொழிலை அணுகலாகாது.

கிரீலி

899. ஆசிரியனிடம காணப்படவேண்டிய இரண்டு முக்கிய ஆறறல்கள தெரிந்த பொருள்களைப் புதியன போலாக்குவதும புதியனவான பொருள்களைத் தெரிந்தன போலாக்குவதுமே யாகும்.

ஜான்ஸன்

900. நன்ருக எழுதுவது எனபது நனருகச் சிந்திப்பதும நனருக உணர்வதும நனருகக கூறுவதுமாகும்.

அதாவது அறிவும, ஆனமாவும சுவையும உடைமை யாகும்.

பூபாங்

901. ஆசிரியனாக இருகக விருமபுகிறவன முதலில் மாணவனாக இருக்கக கடவன.

டிரைடன்

902. தன்னுடைய நூல்களைப் பற்றிப பேசுகினற ஆசிரியன் பெரும்பாலும தனனுடைய மககளைப் பறறிப் பேசுகினற அனனையைப் போலவே தவறாக நடந்துகொளள பவன.

டிஸ்ரேலி

903. தமமுடைய குழந்தைகளை அழகில்லை எனறு எண்ணும தாய் தந்தையர் அரியர். இந்த மயககம ஈனற குழந்தைகளிடமுள்ளதினும் எழுதிய குழந்தைகளிடம அதிகம.

செர்வாண்டீஸ்

904. மிகச் சிறந்த ஆசிரியர்கள் எனபோர் புதிய விஷயஙகளை எழுதுவோரல்லர், புதிய விஷயங்களைபபோல் தோன்றுமாறு எழுதுவோரே.

கதே

905. ஆசிரியன் நூல்கள அறத்துககுத் துணை செய்யாவிடில் அவனுக்குத் தரவேணடியது புகழுமுடியனறு, தூக்கும கயிறே.

போர்ட்டர்

# 30. எழுதுதல்

906. ஒரு தடவைக்கு மேற்பட்ட தடவை உன்னுடைய நூல் படிக்கப்பட வேண்டுமாயின், பல தடவை திருத்தப் பயப்படாதே.

ஹொரேஸ்

907. ஆற்றலுக்கு ஏற்ற விஷயத்தைக் கண்டு கொண்டால் அதன்பின் ஏற்ற சொற்களும் நடையும் தாமாக வந்து சேரும்.

ஹொரேஸ்

908. சிறந்த விதமாக எழுதுவதற்குரிய முதற்படி மக்களையும் வாழ்க்கையையும் மறுவற நன்குணர்வதே.

ஹொரேஸ்

909. எதையேனும் எழுதிக் கொட்டுவது என்பது இழிந்த காலம் என்பதின் அறிகுறியே.

மான்டேய்ன்

910. நிறையச் சிந்தி, குறையப் பேசு, அதனினும் குறையவே எழுது.

இத்தாலியப் பழமொழி

911. எதை நன்றாகச் சிந்திக்கிறோமோ அதையே தெளிவாக எழுதமுடியும்.

பாய்லோ

912. சிலருடைய புகழ் நன்ருக எழுதுவது, பலருடையது எதையும் எழுதாதிருப்பது.

லாப்ருயர்



பெயின்

913. இயற்கையாகவும் எழிலாகவும் ஆற்றலுடனும் எழுதுவதற்குரிய இணையற்ற வழிகாட்டி உண்மையே.

லாப்ருயர்

914. நான் இப்போது ஒரு காரியம் செய்ய முயன்று கொண்டிருக்கிறேன். அதைத்தான் இக்காலத்து ஆசிரியர்கள் செய்கிருர்கள். விஷயமில்லாமலே எழுதுவதுதான் அது.

ஸ்விப்ட்

915. வாசிக்கச் சோர்வை உண்டாக்காத நூல்கள் அனைத்தும் நல்லவையே.

வால்ட்டேர்

916. ஆசிரியன் புகழைப் பிறர் அழிக்க முடியாத சமயத்தில் ஆசிரியன் ஒருவனே அழித்துக் கொள்ள முடியும்.

தாமஸ் பெய்ன்

917. எழுதியே தீருவேன் என்று முனைய முடியுமானல் எந்த வேளையிலும் எழுத முடியும்.

ஜான்ஸன்



ஷில்லர்

918. எழுதுவதில் இன்பம உண்டென்பர், ஆனால் எழுதி—நன்ருக எழுதி முடிந்த பின்னரே.

ஜான்ஸன்

919. ஆசிரியர் தொழிலும் ஒரு தொழிலா? ஆயினும அது உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும ஆற்றலுடையதே.

வால்ட்டேர்

920. சிறப்பின்றி எழுதும் கலை கண்டுபிடிக்கப் படுவதற்கு முன்னமே பண்டைப் புலவர்கள் எழுதினர். அக் காலத்தில் எழுதுவது எனபது சிறப்பான வகையில் எழுதுவதே.

லிச்சன்பெர்க்

# 31. மேதை

921. மேதை மட்டுமுடைய மேதையரைப் பெரியோர் மதிப்பதில்லை. சால்பு மட்டுமுடைய பெரியோரை மேதையர் மதிப்பதில்லை. ஒழுக்கமின்றி மேதையோ பெருமையோ உடையவரைச் சான்ருேர் மதிப்பதில்லை.

லாபுரூயர்

922. மேதையின் சாமர்த்தியத்தைக் கண்ணுல் காண முடியாது. அறிவினுலேயே காண முடியும். அது போதுமானதே.

பாக்ஸ்

923. ஒரு நாட்டுக்கு ஒரு மேதை ஒரு தங்கச் சுரங்கம் போலாகும்.

பிராங்க்லின்

924. நான் மேதைகளைப் போற்றுவேன், ஆனால் சாதாரண மக்களுடனேயே பேச விரும்புவேன்.

செஸ்டர்பீல்டு

925. மேதை என்பதெல்லாம் வெறும் பொறுமையே.

பூபாங்

926. மேதை ஒரு நாளும் சும்மா இருக்க முடியாது.

ஜான்ஸன்

927. வாழ்வின் விளக்கைவிட மேதையின் விளக்கு விரைவில் எரிந்து போகும்.

ஷில்லர்

928. மேதைகளின் நூல்களில் காண்பன நாம் விலக்கி விட்ட கருத்துக்களே. அவை அவர்களிடமிருந்து நம்மிடம் ராஜாதிகாரத்துடன் வந்து சேர்கின்றன.

எமர்ஸன்

929. மேதை என்பது மனிதனிடம் கடவுள் விளங்குவதாகும். எல்லோரிடமும் மங்கிக் காண்பது இவரிடம் சுடர்விட்டெரியும்.

கார்லைல்

930. மேதையின் நூலைச் சுவைக்க முடிவதற்குக் காரணம் சுவைப்போரிடம் மேதைக்குணம் இருப்பதே.

போ

931. மேதை என்பது ஒரு ஆற்றலன்று, பல பெரிய ஆற்றல்கள் ஒன்று கூடியதே.

விப்பிள்

932. மேதையின் வாழ்க்கை வரலாறு சுருங்கியது, மேதை தம்முடைய நூல்களிலேயே வாழ்ந்து விடுகிறார். மற்றவை தேவையில்லை.

எமாஸன்

933. எந்த மேதையும் உடல்வளம் பெற்றவராக இரார்.

கதே

934. உலகம் எப்போதும் மேதையை எதிர்ப்பதே வழக்கம்.

ஹாஜ்லிட்

935. மேதையை அளக்கும்கோல் இது: சுற்றிச் சுற்றி வருகிறதா அல்லது முன்னேறுகிறதா?

கோல்ரிட்ஜ்

936. மேதைகள் சாதாரண மக்கள் பேச்சைக் கேட்டு வருந்தார், வேறு பிராணிகள் என்று வினோதம் காணும் ஆற்றலுடையவராதலால்.

கோல்ரிட்ஜ்

937. மேதை என்பவனே கடவுள் தரும் அருட்பிரசாதங்களுள் தலையாயது, ஆனால் அதை நாம், சிறிது பொழுது வினோதம் காட்டிச் சாம்பலாகும் வாணவேடிக்கையாகவே கருதிப் பாழாக்கிவிடுகின்றோம்.

கார்லைல்.

938. மேதை சுதந்திரமுள்ள இடத்திலேயே வாழ முடியும்.

மில்

939. மேதை கோபுரம்போல் உயர்ந்துவிடுகிறான். சாதாரண மக்கள்போல் வாழ அறியான். அதுதான் மேதையாயிருப்பதற்குரிய தண்டனை.

எமர்ஸன்



எமர்ஸன்

940. மேதையின் உடைத்தெறியும் சக்தியைப் பார்த்தால் வெடிமருந்துகூட அதன் முன் நிற்க முடியாது.

ஹக்ஸ்லி

941. மனிதனுடைய சக்திகளைப் படம் போட்டு எடுப்பதே மேதையாகும்.

ஹேடன்

942. மேதை தோன்றியதும் மேதையல்லா வழிக்ளில் சிறந்தோர் அனைவரும் மேதையைக் கேலி செய்வர். மேதை தன்னை அறியக்கூடியவரை உண்டாக்கியே தனக்கு மதிப்புப் பெறும்.

புரூட்

943. நமக்கு வாழ்வு விரைவில் சுவையற்றதாக ஆகிவிடும், ஆனால் மேதைக்கோ ஒருநாளும் அவ்விதம் ஆவதில்லை.

லவல்


ஹியூம

**944.** மேதை என்பது பல நூற்றாண்டுகளாகச் சேர்த்துவைக்கப் பட்ட வெடிமருந்துக் கிடங்கேயாம.

நீட்சே

**945.** பொது மக்கள் மிகுந்த பொறுமையுடையவரே, அவர்கள மேதையைத் தவிர மற்றெல்லோரையும் மன்னித்துவிடுவர்.

ஆஸ்கார் ஒயில்ட்

**946.** மேதை மிகுந்த கவன சக்தி உடைமையே எனபர். ஆனால் மேதைதான் கவன சக்தியை வளர்க்கின்றதேயன்றிக், கவன சக்தி மேதையை உண்டாக்குவதில்லை.

வில்லியம் ஜேம்ஸ்

**947.** மேதைக்கேயுள்ள உரிமைகள் கற்காமல் அறிவதும, அறியாமலே சரியாக முடிவு செய்வதும், விஷயங்களின மர்மங்களைத் தெரிவதுமாகும்.

பீயர்ஸ்

**948** மேதை பட்டம் பதவிகளை நாடுவதில்லை.

வுட்ரோ வில்ஸன்

**949.** மேதை என்பது அளவற்ற உழைப்பே.

லாங்பெல்லோ

**950.** மேதை என்பது இடைவிடாத கவனமேயன்றி வேறன்று.

ஹெல்வெஷியஸ்

951. மேதை என்பது ஒருவர்க்குப் பொறுமையுடன் வேலை செய்வதற்குள்ள விசேஷத் திறமையையே குறிக்கும்.

பூபாங்

952. மேதை என்ற ஒன்றை நான் அறியேன். எல்லாம் உழைப்பும் சுறுசுறுப்புமே யாகும்.

ஹோகார்த்

953. மேதை என்பது மிகுந்த திறமையுள்ள மனம், ஏதேனும் ஒரு திசைபற்றிச் சஞ்சரிப்பதாகும்.

ஜான்ஸன்

954. மேதை என்பது காண்பதற்குள்ள விசேஷ சக்தியே யாகும்.

ரஸ்கின்

955. மேதை என்பது அறிவினால் மெருகிடப்பட்ட பொழுதே மேன்மை யுறும்.

கோல்ட்டன்

956. ஆள்வினையுடைய மேதையைப் போன்ற மேதை உலகில் கிடையாது.

மிச்சல்

957. நிலம் வளமுடையதாயினும் பண்படுத்தா விடில் களைகளையே தருவதுபோல் மேதையும் பண்பாடு பெறாவிடில் தீமையே தரும்.

ஹ்யூம்

958. அறிவுத்திறன் பாரம்பரியத்துக்கு உட்பட்டது. ஆனால் கற்பனைத்திறனோ மேதை அதற்கு உட்பட்டதன்று

கோல்ரிட்ஜ்

959. மேதை தன்னுடைய பாதையைத் தானே அமைத்துக்கொண்டு, தன்னுடைய விளக்குடனேயே செல்வான்.

வில்மாட்

960. உண்மையான மேதை ஒருவன் தோன்றியுள்ளான் என்பதை, முட்டாள்கள் அனைவரும் அவனுக்கு விரோதமாகச் சேர்வதினின்று அறிந்து கொள்ளலாம்.

ஸ்விப்ட்

961. இடைவிடாமல் கவனிக்கவும் உறுதியாக நிற்கவும் ஆற்றலுடையவன் ஒவ்வொருவனும் தன்னை அறியாமலே மேதையாக ஆகிவிடுவான்

புல்வர்

962. பெரிய மேதைகளுடைய வாழ்க்கை வரலாறுகள் சிறியனவாகவே உள.

எமர்ஸன்

963. மேதை என்பது பிறவி ஆற்றல், அதை ஒரு போதும் கல்வியால் பெறமுடியாது.

டிரைடன்

964. மேதையிடம் முதலாவதாகவும் கடைசியாகவும் வேண்டப்படுவது உண்மையிடமுள்ள பக்தியே.

கதே

**965.** மக்களுக்கு மகிழ்ச்சி தராத மேதையின் நூல் எதுவும் கிடையாது.

லவல்

**966.** மேதையாக இருக்கத் தக்கவரே மேதைகளை அறிய முடியும்.

ஸ்டானிஸ்லாஸ



ஜார்ஜ் எலியட்

**967.** ஒவ்வொரு நூற்றாண்டிலும் ஐந்தாறு மேதைகட்கு அதிகமாகத் தோன்றுவதில்லை. அவர்கள் சேர்ந்து நின்றால் அகில உலகமும் அவர்களை அசைக்க முடியாது.

ஸ்விப்ட்

**968.** சமய உணர்ச்சியில்லாத மேதை அரண்மனையின் வாயிலிலுள்ள விளக்கை ஒக்கும், அது வெளியே ஒளி காட்டும், உள்ளே இருளாயிருக்கும்.

மோர்

**969** மேதையின் சிறப்பியல்புகளில் ஒன்று தன்னுடைய விளக்கைத் தானே ஏற்றிக்கொள்ளும் சக்தியாகும்.

பாஸ்டர்

**970.** மேதை என்பது பெரும்பாலும் நல்லுணர்ச்சிகளைப் பெறவும் வளர்க்கவுமுள்ள திறமையே யாம்.

ஜார்ஜ் எலியட்



971. மேதை மக்களுக்கு இன்ப வாழ்க்கையும மனஅமைதியும தரும் பொழுதே மரியாதைதக குரியதாகும.

எஸ்ஸக்ஸ்

## 32. கற்பனு சக்தி

ஷேக்ஸ்பியர்

972. உன்மத்தன், காதலன், கவிஞன இம்மூவரும் கற்பனு சக்தி நிறைந்தவர்.

ஷேக்ஸ்பியர்

973. கற்பனு சக்தியுடையவர் பாமர மக்கள் துய்க்க முடியாத பல பெரிய இன்பங்களைத் துய்ப்பர்.

எடிஸன்

974. கற்பனுசக்தி, அழகு என்றுசொல்வதெல்லாம் உண்மையையே.

கீட்ஸ்

975. மனிதனை அறநெறியில் நிறுத்தும் கருவிகளுள் சிறந்தது கற்பனு சக்தி.

ஷெல்லி

976 கற்பனுசக்தி என்பது ஆன்மாவின் கண்ணுகும.

ஜூபர்ட்

977. கற்பனை சக்தியின் சிறப்பு யாதெனில் வெளித் தோற்றத்தின் அடியிலுள்ள உண்மையைக் காண்பதாகும்.

ரஸ்கின்

# 33. பண்பாடு

978. ஒவ்வொருவனும் தான் எல்லா அம்சங்களிலும் எவ்வாறு ஆகமுடியுமோ அவ்வாறு ஆகுக என்பதே பண்பாட்டின் தலையாய விதியாகும்.

கார்லைல்

979. நாம் சாதாரணமாக எதை உளது என்று கூறுகிறோமோ அதை வெறும் தோற்றம் என்றும், எதைத் தோற்றம் என்று கூறுகிறோமோ அதையே உண்மை என்றும் அறியுமாறு செய்வதே பண்பாடு.

எமர்ஸன்

980. அறிவைப் பயன்படுத்தவும் அறிவுச் சுனையில் அருந்தவும் கற்பிக்கப்பெற்றவனே பண்பாடு பெற்றவன்.

மில்

981. பண்பாடு என்பது சால்பு என்பதன் இலக்கணத்தை அறிவதே.

மாத்யூ ஆர்னல்டு

982. பண்பாடு என்பதற்கு ஒரே விருப்பமே உண்டு. அறிவும் அன்பும் பெறுவதே அது.

மாத்யூ ஆர்னல்டு

983. விஞ்ஞானம் தவிர வேறுவிதப் பண்பாடுகளும் உள. விஞ்ஞானத்தை வளர்க்க விரும்பி இலக்கியத்தையும் கலையையும் வளர்க்காவிடில் எனக்கு மிகுந்த வருத்தமே உண்டாகும்.

ஹக்ஸ்லி

984. உலகத்தில் பேசியவற்றுள்ளும் சிந்தித்தவற்றுள்ளும் உயர்ந்தவையாகவுள்ளவற்றை அறிந்தவனே பண்பாடு உடையவன்.

மாதியூ ஆர்னல்டு

985. பண்பாடு ஒரு வாயில் வழி புக, நம்பிக்கை அடுத்த வாயில் வழி வெளியே சென்றுவிடும்.

ஹாலந்து

986. அரைகுறைப் பண்பாடு ஆடம்பரத்தை விரும்பும், நிறைந்த பண்பாடு எளிமையை விரும்பும்.

போவி

987. உடலுக்கு உணவு தேவையாவதுபோல உள்ளத்துக்குப் பண்பாடு தேவையாகும்.

ஸிஸரோ


நொவாலிஸ்

988. எதுவும் முளையாத நிலம கிடையாது. கனி மரங்களை உண்டாககாவிட்டால் களளியும் கருவேலுமே உண்டாகும. மனிதனும அறவழி நிற்காவிடின் அல்வழியே நிறபான.

லாபுரூயர்

989. ஒருவனுக்குத் தன்னை அறியவும அடக்கவும ஆற்றல் அளிப்பதே பண்பாடாகும.

நொவாலிஸ்

990. எத்தகையோரிடமும் அன்பும அருளும் கொளளுமாறு செய்வதே உண்மையான பண்பாடு. இரக்கத்தை வற்றச் செய்யும எதுவும இறைவன் அருள்வதாகாது.

பீச்சர்

991. எத்துணை வளமுடையதாயினும் பண்படுத்தாத நிலம் பயன் தராததுபோல் பண்படுத்தாத உளளம நல்ல பயன் எதுவும அளிககாது.

ஸெனீக்கா

992. சாதாரண அறிவு உடையவர் எவராயினும் சரி, சிரமப்பட்டால் எத்தகையோர் ஆகவேண்டுமாயினும் ஆக முடியும், பெரிய கவிஞராக மட்டும ஆக முடியாது.

செஸ்டர்பீல்டு



காாலைல

993. நம்முடைய அன்பையும் அருளையும் எவை வளர்க்குமோ அவை எல்லாம நமமுடைய உள்ளத்தைத் தூயதாக்கி ஆன்மாவை உயர் நிலை எயதச் செய்யும.

சானிங்

994. ஒவ்வொருவனும் எத்தகையவன் ஆவதற்காகச் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிருனே அத்தகையவன் ஆவதே பண்பாடு பெறுவதாகும.

கார்லைல்

995. பண்பாடு என்பது ஒரு விஷயம, வெளிப்பூச்சு என்பது வேறு விஷயம்.

எமர்ஸன்

996. ஒருவன் எத்துணைக் கற்றிருப்பினும் கற்றபடி நிற்காதவரை பண்பாடு உடையவன் ஆகான்.

பஸ்விஸ்

997. தலைசிறந்தவற்றைக் கொண்டு சந்தோஷப்படுவது, சந்தோஷப்படுவதற்குக் காரணமாயிருப்பதை அறிவது ஆகியவற்றின் பழக்கமே பண்பாடாகும.

வான்டைக்

998. அழகான விஷயங்களில் அழகான பொருள் காண்போர் பண்பாடு உடையோர். அவருக்குக் கதிமோட்சம் உண்டு.

ஆஸ்கார் ஒயில்ட்

# 34. வித்யா கர்வம்

999. வித்யா கர்வமானது தலையிலுள்ள மூளையை நீக்கிவிட்டு பாண்டித்தியம எனனும குப்பையை நிறைத்து விடுகிறது.

கோல்ட்டன்

1000. மிகப் படித்த முட்டாளே மிகக கொடிய மூடன்.

ஸ்டானிஸ்லாஸ்

1001. வித்யா கர்வம் என்பது பண்டிதன் எனறு பீத்திக்கொள்வதும விளங்க முடியாத நடையில் சொல் வதும் எழுதுவதுமாகும.

மாக்கன்ஸி

1002. நம்மிடம உள்ள அறிவை பிரமாதமாகக் காட்டுவதே வித்யா கர்வம.

ஸிவிப்ட்

1003. ஒரு விஷயத்தின எல்லா அமசங்களையும் அறிய முடியாதவனே வித்யா கர்வி. ஆம, சகிபபுத் தன்மை யில்லாதவனே அவன்.

ரிக்டர்

1004. வித்தியா கர்வியின் மூளை காலியாயிருப்ப தால் அங்கேயே தற்பெருமை எனபது கோயில் கொள்ளும.

ஷென்ஸ்டன்

1005. நூல்களை மட்டும் படித்து வேறு எதுவும் பேசத் தெரியாதவனே வித்யா கர்வி. அவனுடன் யாரும் வாழ முடியாது.

அடிஸன்

1006. வித்யா கர்வம் இல்லை என்று பாசாங்கு செய்வதுபோன்ற வித்யா கர்வம் வேறு கிடையாது.

ஹாஜ்லிட்

1007. வித்யா கர்வம் என்பது இடம் பொருள் காலம் இவற்றிற்குப் பொருந்தாத சொற்களைப் பயன் படுத்துவதாகும்.

கோல்ரிட்ஜ்

1008. வித்யா கர்வம் என்பது புத்தி கிழடுதட்டி விடுவதாகும்.

ஜாக்ஸன்

1009. இந்தப் பொருளற்ற நடைக்கு இத்தனைச் சிரமமா? இதைக் கண்டு கற்றவர் நகைப்பர், கல்லாதவர் வியப்பர்.

போப்



# 35. இலக்கியத் திருட்டு



ஷெரிடன்

1010. *பிறர் அழகான பகுதிகளைத் திருடுவது புகழ தராது, பிறர் தவறுகளைத் திருடுவது அறிவின்மையைக் காட்டும்.*

சார்ல்ஸ் சர்ச்சில்

1011. *ஆம் திருடுவோர்கள், ஆனால் குழந்தைகளைத் திருடுவோர் தம் குழந்தைகள் என்று காட்டும்பொருட்டு அவற்றை அலங்கோலப் படுத்திவைப்பர்.*

ஷெரிடன்

1012. *இக்காலத்தவர் கருத்துக்களைக் கூறினால் திருட்டு என்பர். பண்டைக்காலத்தவர் கருத்துக்களைக் கூறினால் பாண்டித்தியம் என்பர்.*

கோல்ட்டன்

1013. *முடிச்சுமாறிகள் தங்கள் மடியில் கைவைத்துக்கொண்டே நடப்பர். அதுபோல் இலக்கியத் திருடரும் தம்முடையதைத் திருடுவரோ என்று எப்போதும் பயமுடையவராயிருப்பர்.*

கோல்ரிட்ஜ்


எமர்ஸன்

1014. திருடத் தெரியாதவன் குதிரையைத் திருடினால் வாலை வெட்டிவிடுவான். திருடத் தெரிந்தவன் வாலோடு வாலாக வேறொன்று சேர்த்துவிடுவான.

எட்கார் ஆலன் போ

1015. தானாக எழுதக்கூடியவன் தன்னிஷ்டம்போல் திருடலாம என்ற விதி ஒன்று இலக்கியத் துறையில் புகுந்துளது.

எமர்ஸன்

1016. வெற்றி பெறா நாடகம் ஒன்றை நான் வெற்றி பெறுமாறு திருத்திவிட்டால் அது என்னுடையதே.

போஸிகால்ட்

1017. ஞாபகத்திலுள்ள கருத்துக்கள் நம்மை அறியாமலே நமமுடைய நூலில் புகுந்துவிடுவதுண்டு. இதைத் திருட்டு என்று கூறுதல் தகாது.

ஹோம்ஸ்

1018. உண்மையான சிந்தனையாளர் தாம சிந்திக்காத பொருள்களைப் பிறரிடமிருந்து பெறமாட்டார்.

கிங்ஸ்லி

1019. திருடாதிருப்பாய், திருடாமல் இருக்க முடியவில்லையானால் திருடியதைக் கொலை செய்யாதிருப்பாய்.

டாப்லேடி

1020. சில கருத்துக்களை கண்டுபிடிக்க எளியன, ஆனல் பிறர் கண்டுபிடித்துவிட்டால் அவற்றை அறியா திருந்துவிடுவது கடினம்

ஹோம்ஸ்

1021. பிறர் கூறிய கருத்துக்கள் என்பதை ஏற்றுக் கொள்கிறேன். ஆனல் நான் கூறும்போது என்னுடை யவை என்றே எண்ணினேன். பிறரிடம் எழுந்த கருத்துக் கள் என்னிடம் எழலாகாதோ?

லாபுருயர்

1022. இலக்கியத் திருடர்களால் ஒரு நன்மையே னும் உண்டு. நல்லவற்றை நலிந்து போகாமல் காத்து வைக்கின்றனர் அல்லவா?

டிஸ்ரேலி

1023. கடன்வாங்கும் கருத்துக்கள் கடன் வாங்கும் பணம்போல் கடன் வாங்குவோருடைய வறுமையையே காட்டும்.

பிளஸஸிங்க்டன்

1024. அரசர்கள் விரும்பினல் நாணயத்தின் மதிப் பை ஏற்றிவிடலாம். அதுபோல் மேதைகள் பிறர் கருத் துக்களின் அழகைக் மேம்பாடுறச் செய்துவிடுவர்.

ஸ்டேர்ன்

1025. அறிவுடையோரே பிறர் உதவியால் பெரும் பயன் அடைபவர்.

ரஸ்கின்

1026. இலக்கியத் திருடர் திருடியதற்காக நாணுவதில்லை, திருடியது தெரிந்துவிட்டதற்காக அதிகமாக நாணுவர்.

கோல்ட்டன்

1027. மந்திரக் கோலைப் பயன்படுத்திப் பூதங்களை எழுப்பிய மந்திரவாதியின் பணியாளைப் போல்வர் இலக்கியத் திருடர்.

மக்காலே

1028. ஒரு நாட்டிலிருந்து ஒரு நாட்டுக்குப் பொருள்களைத் திருட்டுத் தனமாகக் கொண்டுவர முயல்பவரைப் போன்றவர் இலக்கியத் திருடர், சுங்க அதிகாரிகளிடம் அகப்பட்டுக் கொள்வர்.

லவல்

1029. இலக்கியத் திருடர் ஆண் தேனீக்களைப் போல் இதரர் செய்த தேனைக் கூட்டிலிருந்து திருடுகின்றனர்.

கோல்ட்டன்

1030. நான் பிறர்க்குக் கடமைப்பட்ட விஷயங்களை என்னுடைய நூல்களிலிருந்து நீக்கி விட்டால் என்னுடையது என்று எதுவும் மிஞ்சாது.

கதே

1031. ஷேக்ஸ்பியர் பிறர்க்குக் கடமைப்பட்டவரே, ஆனால் பிறரிடமிருந்து பெற்ற செல்வம் அவருடையதே. இறந்தவற்றை உயிர்பெறச் செய்துவிட்டார்

லாண்டார்


நீட்சே

1032. இலக்கியம் செய்வோர் அனைவரும் பிறர்க்குக் கடமைப்பட்டவரே.

வெண்டல் பிலிப்ஸ்

1033. இதுவரைச் சொல்லாதது எதையும் சொல்லிவிட முடியாது. இறுதியில் வருபவனே எல்லோரிலும் சிறந்தவன்.

பர்ட்டன்

1034. திருடற்க என்னும் தெய்வவாக்கு கவிஞர்களுக்குப் பொருந்துவதன்று.

கோல்ட்ரிஜ்

1035. பிறரிடமிருந்து பெறுவதைச் சிறந்ததாகச் செய்யாவிடில் அது திருட்டே.

மில்டன்

# 36. மொழி

1036. மொழியா? அதுதான் ஆன்மாவின் குருதி. அதில்தான் கருத்துக்கள் பிறக்கின்றன கொண்டுதான் அவை வளர்கின்றன.

ஹோம்ஸ்

1037. மொழி என்பது இலக்கியாசிரியர்களுடைய ஆட்சிக்கு உட்பட்ட ஒரு செய்கைப் பொருளன்று. அது மக்களின் ஆன்மாவின் தோற்றமேயாகும். வழக்காறே அதன் கட்டளைக்கல்.

சேயர்ஸ்


பெர்னாட்ஷா

1038. மொழி எங்கும் நோயுற்றுளது. அது முன்னேற்றத்தைத் தடுக்கும் பாரமாக அமைந்துளது.

நீட்சே

1039. தாய்மொழியைத் திறமையாகப் பயனபடுத்தக் கூடியவன் எவனும வேறு மொழியைத் திறமையாகப் பயனபடுத்தக் கற்றுக்கொள்ள முடியாது.

பெர்னார்டு ஷா

1040. கலைப் பொருள்கள் நாளடைவில் நிறம் குன்றுவதுபோல அணிகளும சொற்களும் நாளடைவில் ஆற்றல் குன்றிவிடுகின்றன.

சாந்தாயனு

1041. மனிதன் செய்துள்ள செயல்களுள் பேசக் கற்றுக்கொண்டதைப்போல் வியக்கத்தகக பெருஞ்செயல் வேறு கிடையாது.

ஆட்டோ ஜெபர்ஸன்

1042. இரண்டு மொழிகளையேனும் திறமபடக் கற்காதவனை அறிவீனன் என்றே கூறுவேன்.

மார்ட்டின் பிஷர்

1043. மொழி என்பது கருத்தை வெளியிடப் பயன்படும கருவி மட்டுமன்றி, சிந்திப்பதற்குத் தேவையான தலைசிறந்த கருவியுமாகும்.

டேவி

—○—

# அறிஞர் பற்றிய குறிப்புகள்

## அ

1. அடிஸன் (1672—1719) ஆங்கிலக் கட்டுரை ஆசிரியர்.
2. அரிஸ்டாட்டில் (கி. மு. 384—322) உலகப் பிரசித்தி பெற்ற கிரேக்க அறிஞர்.
3. அரிஸ்டோபனீஸ் (கி.மு. 5-ம் நூற்றாண்டு) கீர்த்தி பெற்ற கிரேக்க நகைச்சுவை நாடகாசிரியர்.

## ஆ

4 ஆல்பயரி (1749—1803) புகழ்பெற்ற இத்தாலியக் கவிஞர்.
5. ஆஸ்கார் ஒயில்ட் (1856—1900) ஆங்கில நாடகாசிரியர்.

## இ

6. இப்ஸன் (1828—1906) பேர் பெற்ற நார்வீஜிய நாடகாசிரியர்.
7. இர்விங் (1783—1859) பிரபல அமெரிக்கக் கட்டுரையாளர்.

8. எட்கார் ஆலன் போ (1809—49) அமெரிக்க ஆசிரியர்.
9. எட்வார்ட்ஸ் (1703—58) அமெரிக்க ஆசிரியர்.

10. எபிக்டெட்டஸ் (கி. பி. 1-ம நூற்றுண்டு) ரோமன தத்துவ சாஸதிரி.
11. எமர்ஸன் (1803—1882) அமெரிக்க அறிஞர், கவிஞர்.
12. எல்லிஸ் (1859—1939) பிரபல ஆஙகில காம நூல் நிபுணர், சிறந்த ஆசிரியர்.

ஓ

13. ஓவிட் (கி. மு. 43—கி. பி. 18) ரோமானியக் கவிஞர்.

க

14. கதே (1749—1832) ஜெர்மன நாடகாசிரியர்.
15. கன்பூஷியஸ (கி. மு. 550—479) சீனக் கன பூஷிய மதஸ்தாபகர்.
16. காங்கிரீவ் (1670—1729) ஆங்கில நகைச் சுவை நாடகாசிரியர்.
17. காபெட் (1763—1835) ஆஙகில அரசியல் எழுத்தாளர்.
18. கார்பீல்டு (1831—81) அமெரிகக ஜனுதிபதி.
19. கார்லைல் (1795—1881) புகழ பெறற ஆஙகில அறிஞர்.
20. காலியர் (1650—1716) ஆஙகிலப் பாதிரியார்
21. காலின்ஸ (1824—1889) ஆஙகில நாவலாசிரியர்
22 கான்ராட் (1857—1924) போலந்தில் பிறந்த வர். சிறந்த ஆஙகில நாவலாசிரியர்.
23. கிங்ஸலி (1819—1875) ஆஙகிலப் பாதிரியார், எழுத்தாளா.
24. கீட்ஸ் (1795—1821) ஆஙகில மகா கவிஞர்.
25. குவின்றிலியன் (35—100) லத்தீன அணி இலககண ஆசிரியர்.
26 கோல்ட்டன் (1780—1832) ஆங்கிலப் பாதிரி யாா.

27. கோல்ட்ஸ்மித் (1728—1774) பிரபல ஆங்கிலக் கவிஞர்.
28. கோல்ரிட்ஜ் (1772—1834) ஆங்கிலக கவிஞர்.
29. கௌப்பர் (1731—1800) ஆங்கிலக கவிஞா.
30. கௌலி (1618—1667) ஆங்கிலக கவி, கட்டுரையாளர்.

## ச

31. சாம்பர்ட் (1741—1794): பிரஞ்சு நகைச்சுவை அறிஞர்.
32. சாந்தாயனு (1863— ) அமரிக்கத் தத்துவ சாஸ்திரி.
33. செஸ்டர்ட்டன் (1874—1936) புகழ்பெறற ஆங்கில ஆசிரியர்.
34. செஸடர்பீல்டு (1694—1733) ஆங்கில ஆசிரியர்.

## ட

35. டால்ஸ்டாய் (1828—1910) சிறந்த ருஷ்ய நாவலாசிரியர்.
36. டா வின்ஸி (1452—1519) இத்தாலிய அறிஞர், ஓவியர், விஞ்ஞானி, ததத்துவ சாஸதிரி.
37. டாஸ்டாவஸ்கி (1822—1881) சிறந்த ருஷ்ய நாவலாசிரியர்
38. டிக்குன்ஸி (1785—1859) சிறந்த ஆங்கில எழுத்தாளா.
39. டிரைடன் (1631—1700) புகழுவாயந்த ஆங்கிலக கவிஞர்.
40. டிலட்ஸன் (1630—1694) ஆஙகில மத ஆசிரியர்.
41. டிஸரேலி (1766—1848) பேர பெறற ஆஙகில ஆசிரியா.
42. டுரோலோப் (1815—1881) ஆஙகில நாவலாசிரியர்.

43. டெமாக்கிரட்டீஸ் (கி. மு. 460—370) கிரேக்கத் தத்துவ ஞானி.
44. டெரான்ஸ் (கி. மு, 195—159) ரோமன் நகைச சுவை அறிஞர்.
45. டெனிஸன் (1809—1892) ஆஙகில மகாகவி.

## த

46. தாக்கரே (1811—63) பிரபல ஆங்கில நாவ லாசிரியர்.
47. தாந்தே (1265—1321) இத்தாலிய மகா கவி. உலக மகா கவிஞருள ஒருவா
48. தோரோ (1817—62) அமெரிகக அறிஞர்.

## நீ

49. நீட்சே (1844—1900) பிரபல ஜெர்மன் தத் துவ சாஸ்திரி.
50. நெப்போலியன் (1769—1821) பிரஞ்சுச் சக்கர வர்த்தி.

## ப

51. பட்லர் (1612—80) ஆங்கிலக் கவிஞர்.
52. பர்க் (1729—79) சிறந்த ஆங்கில நாவலர்.
53. பர்ன்ஸ் (1759—96) உலகப் புகழ் ஸகாட்டிஷ் கவி.
54. பாய்லோ (1636—1711) பேர் பெற்ற பிரஞ்சு விமர்சகர்.
55. பாரி (1860—1937) ஆங்கில நாடகாசிரியர்.
56. பால்ஜக் (1799—1850) பேர் பெறற பிரஞ்சு நாவலாசிரியர்.
57. பாஸ்கல் (1623—62) பிரபல பிரஞ்சுத் தத்துவ சாஸதிரி
58. பாஸ்வெல் (1740—1795) டாக்டர் ஜாண்ஸன் சரிதை எழுதிய ஆஙகில எழுத்தாளர்.

59. பிரஸ்காட் (1796—1859) அமெரிக்க வரலாற்றாசிரியர்.
60. பிரான்ஸ் (1844–1924) சிறந்த பிரஞ்சு ஆசிரியர்.
61. பிரௌன் (1605–82) ஆங்கில மத அறிஞர்.
62. பிரௌனிங் (1812–89) ஆங்கில மகா கவி.
63. பிளாபர்ட் (1821–1880) சிறந்த பிரஞ்சு நாவலாசிரியர்.
64. பிளினி (23–79) ரோமன ஆசிரியர்.
65 பிளேக் (1757–1827) ஆங்கிலக் கவிஞர், ஓவியர்.
66. பிளேட்டோ (கி. மு. 427–347) கிரேகக தத்துவ சாஸ்திரி.
67. பீட்ஹோவன் (1770–1827) உலகப்புகழ் டச்சு சாகித்திய கர்த்தா.
68. பீல்டிங் (1707–54) ஆங்கில நாவலாசிரியர்.
69. புல்லர் (1608–61) ஆங்கிலப பாதிரியார்.
70. புல்வர் (1803–73) ஆங்கில நாவலாசிரியர்.
71. புளுட்டார்க் (50–120) சிறந்த கிரேக்க அறிஞர்.
72. பூபாங் (1707–1788) சிறந்த பிரஞ்சு இயற்கை விஞ்ஞானி
73. பெர்னர்ட்ஷா (1856–1950) உலகப்புகழ் ஆங்கில நாடகாசிரியர்
74. பெய்லி (1788–1867) ஆங்கில ஆசிரியர், சிற்பி.
75. பெனலன் (1651–1715) பிரஞ்சுப் பாதிரியார், சிறந்த எழுத்தாளர்.
76. பென் ஜான்ஸன் (1573–1637) பிரபல ஆங்கில நாடகாசிரியர்.
77. பென்னெட் (1867–1931) சிறந்த ஆங்கில நாவலாசிரியர்.
78. பேக்கன் (1561–1626) பேர்பெறற ஆங்கில அறிஞர்.
79. பேட்டர் (1839–1894) சிறந்த ஆஙகில எழுத்தாளர்.
80. பேஜ்ஹாட் (1826–1877) ஆங்கிலப் பொருளியல் ஆசிரியர்.
81. பைரன் (1788–1824) ஆங்கில மகா கவி.

82. போப் (1688–1744) ஆங்கில மகா கவி.
83. போவி (1820–1904) அமெரிக்க ஆசிரியர்.

## ம

84. மக்காலே (1800—59) சிறந்த ஆங்கில ஆசிரியர்.
85. மாண்டேகு (1867—1928) ஆங்கில ஆசிரியர்.
86. மாண்டேய்ன் (1533—92) பிரஞ்சு அறநூலறிஞர்.
87. மாதியூ ஆர்னல்டு (1822—88) பிரபல ஆங்கிலக் கவி.
88. மார்க் ட்வைன் (1835–1910) பிரபல அமெரிக்க நகைச்சுவை ஆசிரியர்.
89. மார்ஷியல் (40—102) ரோமாணியக் கவிஞர்.
90. மாரிஸ (1834—1896) ஆங்கிலக கவிஞர்
91. மான் (1875—) பிரபல ஜெர்மன நாவலாசிரியர்.
92. மிச்சலே (1798—1874) பிரஞ்சு சரித்திர ஆசிரியர்.
93. மில் (1806—73) பிரபல ஆங்கிலத் தர்க்க சாஸ்திரி.
94. மில்ட்டன் (1608–74) ஆங்கில மகாகவி.
95. மூர் (1779—1852) ஐரிஷ் கவிஞர்.
96. மெரிடித் (1831—91) ஆங்கிலக் கவிஞர்.
97. மென்ஷியஸ் (கி. மு. 372—289) பேர்பெற்ற சீன ஞானி.
98 மைக்கேல் ஆஞ்சலோ (1475—1564) இத்தாலிய ஓவியர்.
99. மோலியர் (1622—73) உலகப் புகழ் பிரஞ்சு நாடகாசிரியர்.

## ர

100. ரஸ்கின் (1819—1900) சிறந்த ஆங்கில ஆசிரியர்.

101. ரிக்டர் (1763—1825) ஜெர்மன் நாவலாசிரியர்.
102. ரூஸ்வெல்ட் (1858–1919) அமெரிக் ஜனாதிபதி.
103. ரூஸோ (1712—78) பிரஞ்சுத் தத்துவசாஸ்திரி.
104. ரெய்னல்ட்ஸ் (1723—92) ஆங்கில ஓவியர்.
105. ரோடின் (1840—1917) சிறந்த பிரஞ்சுசிற்பி,
106. ரோஷிவக்கல்டு (1630—80) பிரபல பிரஞ்சு ஆசிரியர்

## ல

107. லவல் (1819—91) அமெரிக்கக் கவிஞர். ராஜதந்திரி
108. லாக் (1634—1704) ஆங்கில தத்துவசாஸ்திரி.
109. லாங்கினஸ் (210—273) கிரேக்கத் தத்துவ சாஸ்திரி.
110. லாங்பெல்லோ (1807—82) சிறந்த அமெரிக்க கவிஞர்.
111. லாண்டார் (1775—1864) பிரபல ஆங்கில ஆசிரியர்.
112. லாப்ருயர் (1645—96) பிரஞ்சு அறநூற் புலவர்
113. லாம் (1775—1834) ஆங்கிலக் கட்டுரையாளர், விமர்சகர்
114. லாமார்ட்டன் (1790—1869) பிரஞ்சு ஆசிரியர்
115. லிங்கன் (1809—1865) அமெரிகக ஐக்கிய நாட்டு ஜனாதிபதி
116. லிட்டன் (1803—1873) ஆங்கில நாவலாசிரியர்
117. லூதர் (1483—1546) ஜெர்மன் மதாச்சாரியர்
118. லேஹண்ட் (1784—1829) ஆஙகிலக் கட்டுரையாளர்
119. வாட்லி (1787—1863) ஐரிஷ் பாதிரியார்.
120. வால்ட் விட்மன் (1819—1892) அமெரிக்கக் கவிஞர்.

121. வால்ட்டேர் (1694—1778) சிறந்த பிரெஞ்சு ஆசிரியர்.
122. வாவனர்கூஸ் (1715—47) பிரபல பிரெஞ்சு அறநூல அறிஞர்.
123. வான்டைக் (1599—1641) பெல்ஜிய ஓவியர்.
124. விச்கோட் (1610—83) ஆங்கிலப பாதிரியார்.
125. விஸலர் (1834—1903) அமெரிக்க ஓவியர்.
126. வெர்ஜில் (கி. மு. 70—19) லத்தீன மகா கவிஞா.
127. வோர்ட்ஸ்வர்த் (1770—1850) ஆங்கில மகாகவி.

## ஹ

128. ஹ்யூம் (1711—1776) பிரபல ஆங்கிலத் தத்துவ சாஸதிரி.
129. ஹக்ஸ்லி (1825—95) புகழ்பெற்ற ஆங்கில விஞ்ஞானி.
130. ஹாதகார்ன் (1804—64) பிரபல அமெரிகக ஆசிரியர்.
131. ஹாஸ்லிட் (1777—1830) ஆங்கிலக் கட்டுரையாளர்.
132. ஹீன் (1797—1856) சிறந்த ஜெர்மன் கவிஞர்.
133. ஹூட் (1798—1845) ஆங்கிலக் கவிஞர், நகைச்சுவை வாணர்.
134. ஹூகோ (1802—85) சிறந்த பிரஞ்சு நாவலாசிரியர்.
135. ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் (1820—1903) ஆங்கிலத் தத்துவ சாஸ்திரி.
136. ஹெர்ஷல் (1738—1822) ஜெர்மன் வானசாஸதிரி.
137. ஹொரேஸ் (கி.மு. 65—8) சிறந்த ரோமன் கவிஞர்.

138. ஹோம்ஸ் (1809—94) பேர் பெற்ற அமெரிக்க ஆசிரியர்.

139. ஹோமர் (கி.மு. 10-ம நூற்றுண்டு) பிரபல கிரேக்க கவிஞர்.

ஸ

140. ஸ்காட் (1771—1832) பிரபல நாவலாசிரியர்.

141. ஸ்டானிஸ்லாஸ் (1677—1766) போலந்து அரசர்.

142. ஸ்டீல் (1672—1729) ஆங்கிலக் கட்டுரையாளர்.

143. ஸ்டீவன்ஸன் (1850—94) சிறந்த ஆங்கில நாவலாசிரியர்.

144. ஸ்டேர்ன் (1713—68) ஆங்கில நகைச் சுவை ஆசிரியர்.

145. ஸ்விப்ட் (1667—1745) பிரபல ஐரிஷ் ஆசிரியர்.

146. ஸ்வின்பர்ன் (1837—1909) ஆங்கிலக் கவிஞர்.

147. ஸாக்கரட்டீஸ் (கி. மு. 456—399) கிரேக்க ஞானி.

148. ஸிட்னி ஸ்மித் (1771—1845) ஆங்கிலப் பாதிரியார்.

149. ஸிம்மன்ஸ் (1798—1856) அமெரிக்கப் பாதிரியார்.

150. ஸிஸரோ (கி. மு. 106—43) ரோமன் நாவலர்.

151. ஸெர்பான்டீஸ் (1547—1616) ஸபானிஷ் ஆசிரியர்.

152. ஸெனீக்கா (இறப்பு கி.பி. 65) ரோமன் தத்துவ சாஸ்திரி.

153. ஸைமனாடீஸ் (கி. மு 550—467) கிரேக்க கவிஞர்.

## ஜ

154. ஜான்ஸன் (1709—84) பிரபல ஆங்கில ஆசிரியர்.

155. ஜார்ஜ் எலியட் (1819—1880) ஆங்கில நாவலாசிரியை.

156. ஜூபர்ட் (1754—1824) பிரஞ்சுத் தத்துவ சாஸ்திரி.

157. ஜெபர்ஸன் (1743—1826) அமெரிக்க ஜனாதிபதி.

158. ஜேம்ஸ் (1842—1910) சிறந்த அமெரிக்க உளவியலறிஞர்.

—O—